ஓம்மகாகணபதேயநம:

# சகலாலயசந்நிதானஸ்தௌத்திய மான்மியம்

## விநாயகரடைக்கலப்பா

இஃது

காஞ்சிமாநகரம், சைவசாமிநாத

தேசிகருக்குப் புதல்வராய்ச் சுத்தவேதாந்தப்

பிரமஞான நிஷ்டாபரராய் விளங்கிய

சா. கோவிந்தராஜதேசிகரால்

இயற்றப்பட்டு

ம-ா-ா-ஸ்ரீ மகாகனம்பொருந்திய ஆ. நாராயணசாமி முதலியார்
(Rai-Baha-dur, Mysore Hall, Bangalore)
அவர்கள் குமாரரும்
மேலயர் வைதிகவருண் மரபினருமாகிய
[redacted] கனம்பொருந்திய [redacted]

ஆ. நா. கண்ணப்ப முதலியார

லோகோபகாரமாயச்சிடுவிக்கப்

பட்டது.

பெங்களூர்

மார்னிங்ஸ்டார் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது

௧௮௯௩-௵ நவம்பர் மாதம்.



உ

ஓம்மகாகணபதேயநம:

இந்நூற்க ணாதியோடந்தமாகக்கூறியுள்ள

கடவுளரியாவருக்கும்பொது விஞ்ஞாபனம்

விநாயகர்வணக்கம்

ஆசிரிய விருத்தம்

திருவருட்புணையாய்க் கருணையங்கடலாய்ச்
சேய்க்குறு தாய்தந்தையரினும்
பெரியவாதரவாயுயிரினுக்குயிராய்ப்
பிறங்கியெஞ்ஞான்று மன்பர்கள்பாற்
றருவினுஞ்சிறப்ப வேண்டியாங்கனைத்துந்
தண்ணருண்முகிலெனவழங்கி
யிருமையின்சித்திக்கோர்முதலாகு
மிபமுகத்தெந்தைதாட்பணிவாம் (1)




விஞ்ஞாபனம்

மறைகளோரான்கெண்ணான்குபநிடத
வகைகளாகமமிதிகாச
முறையெலாமுழங்குமிறைவிநாயகர்முன்
முறையிதன்கண்ணியம்புதலுற்
றுறைதேவதேவித்தந்தைதாய்காளிங்
குயர்வுகூர்நும்மடித்தொழும்பி
னுறுமடியேனோர்நாளெனதகத்தே
யுட்கார்ந்திருக்குமப்போதே (1)




கிரீடாதிபூண்கள்கிளர்தரமீக்கண்
கிளர்ச்சிகூர்சயிரிபமிவர்ந்தே
புரீடமிரேற்றத்தொருவர்சேணின்று
போந்துதற்சூழ்தரப்பணிஞர்

தராதலத்தியர்ண்டமுற்றிடாப்பான்மைச்
சதுர்வகைச்சேண்மலர்த்திரளாற்
பிரீதியாயென துசிரத்திருகரத்தாற்
பெய்தனர்பன்முறைகுனிந்தே

பெய்தொறுமடியேனுடலெலாங்குளிர்ந்துப்
பேயியன்மனமெலாங்குளிர்ந்து
வெய்யபாழ்ஞ்சோபதாபயாதியவும்
விலகுறவமுதமேனியனுய்த்
துய்யனுயெனைக்கண்டிவ்வுபசரணை
தொழும்பனேற்கீண்டிவருவந்தே
செய்தரலியாதுகாரணத்தென்றே
சிந்தைசெய்போதெனதுடற்கண் (3)

பேரியலிலிங்கநிகழ்தரக்கண்டிப்
பேற்றினுலல்லவோவிவரிங்
காரருச்சனைகளேருறச்செய்தென்
னகமகிழ்வித்தனரென்றே
தேரலுற்றருநுஞ்சீரருளினுக்கே
சிந்தைசெய்தயர்வுறுமெனைக்கை
சோரவிட்டிடாமனுடொழுநலமே
தோயவாண்டாட்கொளல்கடனே (4)

பாவியோவலதுபுண்ணியனேயோ
பாவியேனியாதுநன்கறியேன்
றேவரீரறிவீர்பாவியேயெனினுஞ்
செய்பவமனைத்துமன்னித்தே
மேவுறவிருமைப்பேறுயரருட்கண்
மேவினேன்மீமிசையுய்த்தே
பாவிவையராவுந்திருவுளங்கொண்டுப்
பரிபாலனஞ்செயல்கடனே (5)

உ







## விநாயகரடைக்கலப்பா

### விருத்தம்

செழுமைசால்மணியவிர் பொன்முடிசேருச்சி
திருநீறுதிலதமணி நுதல்முக்கண்க
டழைசெவிகணுல்வாய் வெண்கோடுநாசித்
தனித்துதிக்கைமும்மத நாலிருபுயங்க
ளெழின்மிக்கவைங்கரங்கள் முந்நூலாக
மியம்பரியபேழைவயி றிடையிற் பொன்ஞா
ணிழைகொண்டபூந்துகில் பொற்சதங்கைபாத
மெய்தினுயடியேனுக் கிரங்கிடாயே (1)

கடலைபொரியவறேங்காய் கனிகற்கண்டு
கன்னறேன்பால்பாகு மொச்சையாதி
வடைதோசைபயறு பாயாசத்தோடு
வகைவகையாம்போசனங்கள் பலவுமீந்தென்
னுடல்பொருளாவியுமீந்தேன் கைக்கொண்டென்னை
யுழலவிடா துன்னடிக்குத் தொழும்பனுய்க்கொள்
மடலவிழ்தாமரையனைய பதத்தெம்மானே
மாமுகவிநாயகவென் மணிவிளக்கே (2)

விநாயகரடைக்கலப்பா

குணக்கடலேயளிப்பெருக்கே கோதிலாதாய்
குவலயந்தோன்றியமுதலா யிந்நாள்காறு
மிணக்குவித்துவெகுபேரை நின்றொழும்புக்
கேகாந்தவீடதனை யெளிதிற்றந்தாய்
மணமலரிற்றயிலமெள்ளி லுறுதலேய்ப்ப
மன்னியநின்காட்சியை யான்காண்பதோது
துணைவருநின்பேரருளைப் பெறுவதென்நா
டொழும்பனேன் குறையகலு நாளெந்நாளோ (3)

அலைகடல்சூழ்புவிய தனில்மெய்வருந்தி
யகம்வாடிக்கண்களி னீராறுபாய
நிலைபிறழ்ந்துநெட்டுயிர்த்து நிற்குந்தன்மை
நின்னருளாற்பகலவன் முன்பனியாமென்றே
தலைமையநின்பதமலர்க்குத் தஞ்சமென்ற
தமியனேற்கிருமைநல மளித்தலோடு
புலனுணரவொண்ணா நின்னரியகாட்சி
பொற்புறநாடோறு மருள்புனிதவாழ்வே (4)

கவிவாணர்சித்தர்முத் தரியார்க்குநீயே
கண்கண்டமெய்ப்பொருளாய்க் காட்சிதந்தே
நவநவமாஞ்சித்திமுத்தி யளித்தாயென்றே
நான்மறைகள்முழங்க பெரியோர்கள்கூற
பவசாகரத்தழலு மடியனுள்ளம்
பதைபதைத்துன்றிருவடிக்குத் தஞ்சமானே
னவமானசனன மரணத்தழுத்தா
தாண்டுகொளுன்னருளின்கடனுமன்றே (5)

பாவபுண்ணியமிரண்டிற் பாவஞ்செய்தோர்
பாழ்நரகத்தழுந்துவர் நற்புண்ணியத்தோ
ராவலெலாந்தீரவிக மனுபவித்துன்
னரியதிருவடிநீழல் பெறுவரொன்றே

விநாயகரடைக்கலப்பா

நாவினாலறிஞர்குழா மொழியவின்னு
நன்னூல்களோலமிட வுணர்கிலேனாய்க்
காவெனவென்றுனது தாளடையாதோனாய்க்
கவலையுறுமென்னையுநீ காத்தல்வேண்டும் (6)

ஏழையினுமேழையான் கைவிட்டாயே
லிடிந்துமனம்வருந்தி யிகபரமிழந்தே
யாழ்நரகத்தழுந்தி யிடர்ப்படுதேலோடே
யாதரவோர்சிறிதுமின்றியவலமாவேன்
காழ்மனதையிளகுவித்துத் தேகமுள்ள
காலத்திற்றானேநின் கமலபாதத்
தோழமைகொண்டொழிவு பெறுவின்பவாழ்க்கைச்
சுகங்கொண்டுபிழைத்திடவே துணைசெய்வாயே (7)

தேகத்திற்சீவனுக்குச் சாட்சியாகித்
திகழ்கின்றகூடஸ்த சொரூபந்தானே
மாகத்துமற்றிடத்து முள்ளதான
மகாப்பிரமசைதன்னிய மென்னுஞான
பாகத்தைச்சுவானுபவமா யுணர்த்திப்
பகரரியநிரதிசயா னந்தபோக
தாகத்தைத்தீர்த்தருளக் காண்பதெக்நா
டடியனேன்மனமகிழ்நா ளெந்நாளோ (8)

சொற்பனசாக்கிரஞ் சுழுத்திதுரியத்தோடு
துரியாதீதப்பதமா மவற்றுண்முன்னர்
நிற்குமொருமூன்றகலத் துரியமோர்ந்தந்
நிமலதுரியத்தினின்று துரியாதீதச்
சற்பதவிபெற்றுபரப் பிரம்மானந்தச்
சகசமேற்கொண்டு சலனங்கடேர்ந்தே
யுற்பவவாதனையகன்று தானேதானா
யுற்றொளிருநாளெந்நா ளுரைசெய்வாயே (9)

விநாயகரடைக்கலப்பா

இன்பதுன்பத்திரைமோது மாயாவாரி
யிடையழுந்தியெள்ளளவும் விவேகமின்றி
யன்புநினதடிமலர்க்கண் சிறிதுமின்றி
யல்லல்வடிவாம்பிழைப்பே பிழைத்துநாளு
மென்பில்புழு வெயிலிடைப் பட்டிரிதல்போல
வெளியேன்மானிடவுருவ மெடுத்துமந்தோ
நின்புகழைமதியாம னின்றருட்பேறு
நினையாமற்சுடலைவழி நினைக்கின்றேனே (10)

உண்மகிழச்செய்வது புண்ணியமதாகு
முள்ளுடையச்செய்வது தான்பாவமென்றே
யெண்ணிபெரியோருரைத்த நீதிநூலி
னியற்கையறிந்தந்நெறிக் கணிற்கிலேனாய்
மண்ணாசைபொன்னாசை மாதராசை
மாழ்கியேமெய்ஞ்ஞான மருவிநிற்கு
நிண்ணயமற்றந்தியத்தா நிரயவாழ்க்கை
நினைதோறுநெட்டுயிர்த்துத் தளர்கின்றேனே (11)

எத்தனையோசனனங்க ளெடுத்தெடுத்தே
யெடுத்தசனனங்கடோறு மிறையுன்றருட்குப்
பத்தனாய்வந்தமையா லன்றோவிந்தப்
பக்குவமாமனிதவடி வருளிச்செய்தாய்
முத்தனாயிழிச்சொல்பெறாச்சுத்தனாகி
மூதொளியாநினது திருவடியிற்சேருஞ்
சித்தியையுந்தேகமுள போதேநல்குந்
திறமுனக்கேயல்லாம லெனக்கொன்றின்றே (12)

துயரம்வரிற்பாதலத்தி லழுந்துகின்றேன்
சுகஞ்சிறிதுவரிற்ககனமுக டேகின்றேன்
வயிறாரவுண்ணிலுனை வாழ்த்துகின்றேன்
வயிறெரியக்காணிலுனை வைதுவைதே

விநாயகரடைக்கலப்பா

யயர்கின்றேன்றந்தை தாயினைநோகின்றே
னடுத்தமனைமக்களை நோகின்றேனல்லாற்
செயிர்செய்யும்வினையினை ரொந்தரியவுந்தன்
றிருவடியைத்துணைகொள்ள வறிகிலேனே (13)

பகலவனாலல்லாம விரவுதன்னாற்
பார்விளக்கமுற்றிடுமோ வதனிலான்ற
தகையுனதுகடைக்கண் ணோக்காலேயல்லாற்
றமியனேன்விளக்கம துற்றுய்குவேனோ
விகலெனநின்றுழல்விக்கும் வினைகளெல்லா
மிரவியெதிர்ப்படுமிமம்போல கலச்செய்து
சுகநிலைமையருளுவையேற் றொழும்பனேன்றன்
றுயரகலுநின்புகழுந் துலங்குமாலோ (14)

பூர்வசனனத்தென்னபவஞ் செய்தேனோ
பொல்லாதமிடியாளனாய்ச் சனித்தே
காரதனைக்கண்ணுருப் பைங்கூழொப்பக்
கலக்கமேவடிவாகிக் கடவுளுந்தன்
பேரருளுக்காளாகுந் திறமுமின்றிப்
பேதையிலும்பேதையாய்த் தியங்குகின்றேன்
சோரவிடறருமமல தந்தைமைந்தன்
றுன்மார்க்கனேயெனினுந் துறப்பான்கொல்லோ (15)

கடந்தபெரியோர்களுமே மக்கட்காதல்
கடக்கிலாரெனநூல்க ளியம்பாநிற்க
வடைந்தவெனைக்கைவிடுதல் பிதாவின்மாண்போ
வடையாதோனாயுறினு மாண்டுகோட
னுடையவுனக்கில்லையோ விருக்குதென்னி
லுழலுமெனைக்கண்ணோக்கா திருப்பதென்றோ
தடையானபவமென்னிற் பவத்தைத்தீர்க்குந்
தன்மைநினக்கேயல்லாலெனக் கிங்குண்டோ (16)

விநாயகரடைக்கலப்பா

சஞ்சிதவாகாமியபிரா ரத்துவரதித்
தடைகள்பலவிருப்பினுமுன் சாந்தபார்வை
தஞ்சமெனவடைந்தேன்மேற் சற்றுண்டாயிற்
சகலபவங்களுந்தவிர்ந்துத் தன்னியனுவே
னஞ்சிடேல்மைந்தவென்றோர் மொழியுரைத்தே
யணைத்தெனையாதரித் தருளவேண்டுமின்றேற்
பஞ்சுபடும்பாடல்லாற் கதிவேறில்லை
பகாரியசின்மயமே படிவமரனேய் (17)

என்றைக்குமோரியல்பாய்க் குறியாறுகி
யியல்பெட்டாய்விளங்குமுயர் பிரமச்சாயை
யொன்றியமாமாயையிற்றோய்ந் தீசனுகி
யுரைப்பரியமூர்த்திகர மூன்றுமாகப்
பொன்றுவிக்குமவித்தையிற்றோய் சாயைசீவ
புருடனுய்க்கிரியைகளோர் மூன்றுடைத்தாய்
நன்றிசெயாவாவரணப் போர்வையாலே
நல்லுணர்வோர்சிறிதுமின்றிக் கிடந்ததேனும் (18)

ஈசனினதங்கிசமாஞ் சீவன்றனே
யீடேறவேண்டுமெனுங் கருணையாலே
தேசுகொளும்விட்சேப சத்திதன்னைத்
திருக்கண்ணேக்கவதிற் சத்தமாதிப்
பேசஅரிஞ்சூக்குமபூதங்கடோன்றிப்
பிறங்சவற்றின்சத்துவ மிராசதத்தி
லாசிறனிக்கூறெடுத்து முறையிற்கூட்டி
யணைவியாதறுவித்தும் வேறெடுத்தே (19)

சூக்குமமாமுடலளித்துப் பின்னுமந்தச்
சூக்குமபூதத்தொன்றை யிரண்டுசெய்தே
யாக்கிவற்றுட்பாதியை நந்நான்கதாக்கி
யடுத்தமறுபாதியிற் றன்னமிசம்விட்டு

விநாயகரடைக்கலப்பா

நீக்கமறநான்கோடு நான்கைச்சேர்க்க
நிகழ்ந்தமகாபூதத்தி னின்றுந்தானே
யாக்கையாதியவளித்தா யறிவளித்தா
யளித்தநீமுழுதுமாண்டருள் செய்வாயே (20)

வாழிவிருத்தம்

ஆகுவாகனநாளும் வாழிவாழி
யங்குசபாசந்தானும் வாழிவாழி
ஏகவல்லபைதாட்கள் வாழிவாழி
யின்னருள்விநாயகர்தாள் வாழிவாழி
மோகவேடனையொழித்த முதல்வர்வாழி
முதல்விசரவணர் தரணிமாகம்வாழி
வாகைகொள்சித்தர்முத்தர் வாழிவாழி
வண்மைமிகுமடியார்க ளெவரும்வாழி (21)

விநாயகர் எச்சரிக்கை

புகழ்வல்லபைக்கொருநாயக புரைதீர்ந்தபொக்கிஷமே
யகநொந்தடைவோர்க்கான நல்லருளேயெச்சரிக்கை (1)
எல்லாநமைப்போன்றேயுள னிதயத்திறத்தென்றே
வல்லார்பிறையணிந்தார்மகிழ் மதலாயெச்சரிக்கை (2)
சிவசாம்பவியுவகைக்கடல் சேரவிளையாடு
நவமாமணிப்பூண்மேனியென் னுதாவெச்சரிக்கை (3)
தேவர்முதலியாவர்க்குமோர் திருவேதெய்வத்தருவே
வீவில்சித்திமுத்திக்கொரு வித்தேயெச்சரிக்கை (4)
பாவாணரிற்பாவூற்ருய்ப் பரஞானிகட்கந்தத்
தேவாமிர்தவுணர்வூற்ருய்த் திகழ்வரயெச்சரிக்கை (5)
பொன்னேநவமணியேயுண்மைப் பொருளேயகத்தெருளே
கன்னல்கனிதேனேரின்பக் கடலேயெச்சரிக்கை (6)
விண்ணாதியவைம்பூதமே வேதாந்தசின்மயமே

யெண்ணுமனமொழிக்கெட்டா வெந்தாயெச்சரிக்கை (7)
அதிசீதளஞானானந்த வருமைதிகழினிய
மதியேயடைகதியேயென் மனத்தாயெச்சரிக்கை (8)
கானற்சலமென்றேபுவிக் காட்சியுளம்வெறுத்த
ஞானத்தவர்க்கானபெரு நட்பேயெச்சரிக்கை (9)
பெருநாள்பிறந்திறந்தேயுழல்பேதையடியேனுக்
கொருதாயகமானாயென்னை யுடையாயெச்சரிக்கை (10)
ஓங்காரநல்வடிவாகிய வுயர்பேரொளிப்பிழம்பே
பாங்காயடியனைக்காத்தருள் பரமேயெச்சரிக்கை (11)

இந்நூலாசிரியரொருநாளிதன்கணுள்ளசெய்யுட்களை யாங்காங்கூன்றிநோக்கி இச்செய்யுட்கள் அவ்வளவுசிறப்புடையனவாகக் காணவில்லையே இந்நூலையச்சிடவேண்டுமென்பதேன். வேண்டுவதில்லையென்றதனைக் கைநெகிழவிட்டு அன்றிரவிற்சயனநிஷ்டை கூடியபோது ஒருசிறுவர் அவரிடத்தில்வந்து அந்நூலையெனக்குக் கொடுத்துவிட்டால் நான்அதை என்பேரால் அச்சிட்டுக்கொள்கிறேனென்று மிகவுங்கேட்டுக்கொண்டனர் அதற்கவர்உமக்குவேண்டுமானால் உமக்கென்றேவேறொன்றை முடித்துத்தருகிறேன். இஃதவ்வாறு செய்ததல்லவா கையாலிதனைக்கொடுத்தல் கூடாமையென்றனர் அதற்கச்சிறுவர்நீயும் அச்சிடாமல் எனக்குங்கொடாமல் வைத்திருக்கிறாயேஎன்னத்துக்குவைத்திருக்கிறாயென்று மனவெறுப்பைக்காட்டிப்போயினர் அதுகாரணமாக வுடனே யச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

---

உ

## பிரணவ விநாயகரருமைத் திருப்பா

### வழிபடுகடவுளர்வணக்கம்

### செய்யுள்

தெய்வவிநாயகனையவாந் மானசகோசரமாந்
திருச்சிற்றம்பலத்திறையைச் சிவகாமித்தாயை
யுய்விக்குந்திருப்பதிவாழ் திருநெடுமாறிருவை
யொள்ளியவேன்மயிலிறையை வள்ளிதெய்வானையனை
துய்யபடவேட்டம்மன் முதலம்மன்பலனைத்
துணைகொள் சரச்சுவதியை மாருதியை நிதமிறைஞ்சி
வெய்யகொடும்பாழ்ங்கலிகள் குறைகள்பிறப்பிறப்பு
வேதனைகளெவற்றினுக்கும் விடைகொடுத்திடுவாம்

### ஆசிரிய விருத்தம்

வாரணஞ் சூழலகேத்த வாரணாநநம் வாய்ந்து
மணிகள்பலவுமிழைத்தபைம்பொன் மௌலிபூண்டுத்திருநீற்று
தாரணம்பூண்டொண்ணுதலிற் சந்தனம்பூண்டாகத்திற்
சாற்றுமுந்நூலொடுதொடையல் சகலமும்பூண்டைங்கரரா
யாரும்புஜங்களிடையடிகட்காங்காங்கிசை பூணுடைபூண்
டஸ்தத்துறவங்குசபாச மாகுவாகனத்திவர்ந்து
ஏரணிந்தவல்லபையினி தயங்களிப்பவடியார்கட்
கெளிதிற்காட்சியீந்தருளுமெந்தாய் கண்பார்த்தருளுதியே (1)

கடவுண்மணியேசெழுந்தேனே கண்டேசீனிசருக்கரையே
காமர்வாழைமாபலாக்கனியேமனத்தே நினைத்ததரு
ளடையவரியபைந்தருவே யாருமைகளான் மனநொந்தோ
ரடைந்துவாழுந்தண்ணிழலே யடியார்க்கிடையூறெலா மகற்றிக்
கடைபோகக்கண்பார்த்தருளுங் கருணாநிதியேபெருவள்ளல்
களுமீந்துறுதம்வறுமை யெலாங்காணாதொளிப்பப்பெருமுகில்போ

விடையருமவியாவுமருளெந்தாய் நொந்துன்றாளடைந்தே
னெனக்கிங்குற்றகுறைகவிதீர்த்தெனையுமாண்டாட்கொள்ளுவையே (2)

சிருட்டிதொடங்கியிதுகாறுஞ் சிறியேஞ்செய் தீவினைகளெலாந்
திரண்டோர்வரையிலிருக்கவவை தீர்ந்தபின்பன்றோவருளுண்
டிருளேயல்லாற்கதிருறினுமெழிலிதிரண்டங்கதைமறைக்கி
லியம்பல்வேண்டுமோவின்னு மெனில்யாஞ்செய்யுஞ்செயலினியென்
னிரியுமாறுபவங்களெலாமெழில்கூர் புண்ணியம்பலவு
மிதயத்தடக்கிமனோவாக்குக் காயமூன்றானுறப்புரிந்து
வருகவென்னிலினியெந்நாள்வறியேம் பவங்கடீருநாள்
வள்ளலுன் பேரருளுறுநாள்வருந்தாநின்றேம் ஆற்றுகிலேம் (3)

வேறு

இரவிபோலுமதிபோலுமிமயமெனுமால்வரைபோலும்
பெரியநீயிங்குறவெமக்குப்பேசுங் குறையொன்றிலை யெனினு
மிரவியொளிப்பமதியொளிப்ப விமயவரையு மொளித்ததென
பெரியநீயிங்கொளித்துறலாற் பேதித்துள்ளந்தியங்குகிறேம் (4)

இரவியுதிப்பமதியுதிப்ப விமயவரையுமுதித்ததெனப்
பெரியநீபிரத்தியட்சமதாய்ப் பேதையே முன்னுறல்வேண்டு
மிரவிகோடிமதிகோடி யிமயவரையோர்கோடியினும்
பெரியமகிமைமகாப்பிரபுவே பிரணவத்தெம்பெருமானே (5)

கரந்திங்குறைதலாற்சுகமாய்க் காலங்கழிக்கின்றேனியானுங்
கரந்திங்குறையா தெதிரிலுறிற் கஷ்டநஷ்ட மியார்படுவார்
வருவரேபாவியர்பலருமனத்தி னினைத்தவெலாமிமையிற்
றருவாயென்பர் விடேமென்பார் தரியாதகலச்செய்வரே (6)

அனுபவித்தாலன்றியேயகலாக் கொடும்பாதகமனைத்து
முனையாந்தரிசிக்கப் பெற்றிக்குறலாலொழியாதுளவோதான்
றினமுங்கதிர்முன்னிருளுண்டோசெப்பா யென்றேபலசெய்வார்
மனவாக்கெட்டாவிடத்திருந்தும் வருந்தவருந்தநிந்திப்போர் (7)

பிரணவவிநாயகரருமைத்திருப்பா

அகலவவர்செய்தகல்வதிலு மகன்றேயியற்கை தனிலிருத்த
றகுதியன்றோ மெய்பொய்க்குஞ் சாற்றுநன்மை தீமைக்கு
மிகலேயெந்தஞான்றுமலாவிரண்டுமொன்றாம்பரிசுளதோ
மகனேயென்னிற்பாவியர்க்கு மாதாபிதாநீயேயலவோ (8)

மாதாபிதாக்கணன்மக்கள் வருந்தாதுறச் செய்தாகார்க்குத்
தீதேபுரிவர வருந்தந்திருவுளத்துக்கிசைகாறு
மேதோவியம்பினேனலன்றிது சித்தாந்தமெனிற்சரியே
தாதாயினியெம்முளமுன்றாட்சார்ந்துநிற்கவருள்புரியே (9)

சகளநிஷ்களங்களெனச்சாற்று மிரண்டினுநல்லோர்க்
கிகத்தும்பரத்துமுடனிகழ்ச்சி யென்னவிருப்போம் பொல்லாதார்
முகத்தில்விழியேமகத்துமிரோமுதனூற்கருத்துமிஃதன்றோ
மகத்துவங்கள்பலவுநல்லோர் மரபினுக்கேயல்லவோ (10)

என்னிலெளியேமுளத்துற்ற வெல்லாச்சந்தேகமுமொழிந்த
வன்னைதாதைகுருதெய்வமனைத்து நீயாயநவரத
மின்னற்பாடுபடவிடாதெம்மை யிம்மைமறுமையிலு
முன்னவருமுன்றிருக்குறிப்புக்கொவ்வுமாறுண்டாட்கொள்ளே (11)

எச்சரிக்கை

செழுமாமறை புகழ்ந்தேத்துறுந் தெய்வப்பிரணவமே
தழைபேரொளிப்பிழம்பேயுயர் தாதாயெச்சரிக்கை (1)
மதிசூடியவள்ளல்வரை மகளாகியவெந்தாய்
நிதமுமகிழ்தர முன்வருநிமலா வெச்சரிக்கை (2)
ஆறுநநவிளவறுணையாக வுலகனைத்தும்
வீறுயரசியற்றி வருமேலோ யெச்சரிக்கை (3)
வேரில்விடுநீர்தான தன்விருட்சவுறுப்பெலைக்கு
மாறுந்தகைமைப்போன்றவெம் மாதியெச்சரிக்கை (4)
எவராயினுமெது செய்யினு மிம்மைமறுமையிலுந்
தவறாதுமுன் வழுத்தப்பெற்ற தகையே யெச்சரிக்கை (5)
அடியார்தமக்கிடரியாதொன்று மணுகாமலேகாக்கு
முடையாய்பவவிருட்கோர் கதிரொத்தோயெச்சரிக்கை (6)
ஒருவாதெழுஞ் சுகதுக்கங்களுயர்த்தவுடனழுத்த
பெரிதுமிளைத்துறுவோர்க்கருள்பெரியோ யெச்சரிக்கை (7)

உ

## திருமுருகர் திருவடிச்செய்யுட்டொடையல்

### விநாயகர்வணக்கம்

#### குறள்வெண்செந்துறை

திருமறை முடிவிற்றிகழ் பிரணவமா
மொருவிநாயகர் தாளுள்ளத்துள்ளுவாம் (1)
பெரும்புகழ்விநாயகர் பிரசவாரிசத்தா
ளரும்புகலுற்றோர்க் கரியதொன்றிலையே (2)
மாதேவரீன்ற வாரணவதனத்
தாதாவிருன்ற சரண்விடாதென்றுமே (3)

#### ஆசிரியவிருத்தம்

கங்கைதிகழ் வேணியெங் கண்ணுதல் பராபரங்
கயிலைச்சிதம்பரமுத
லெங்குமுறு சந்திரசேகர ரரோஹரவேனு
வேத்துறும்புண்ணியமுதல்வர்
கொங்குபூஞ்சைவலக்குழலிளம்பிறைநுதற்
கூறரித்தடநெடுங்கட்
பைங்குயிற்பரையோடு முளமகிழவருமுருக
பணியருட்கண்பார்த்தருள் (1)

தணிகையம்பலமுதற்றலமேலாநின்றருளுன்
றஞ்சமடியேஞ்சகலருந்
திணைபுரந்தருண்மகாத்திருமாலுந்திருவுமே
தினமகிழ்ந்தருளுமருக
வணிகுழற்பிறைநுதற்றண்ணருள்விலோசனத்
தமுதத்தினுஞ்சான்றசொற்
றணியல்கூராநநத்தெம்பிராட்டியர்மகிழெந்
தாதாயெமைக்கண்பாராய் (2)

பஞ்சதருவீண்டிலாதமரர்பாற்கேயுறினும்
பஞ்சதருவிற்சான்றநீ
யஞ்சலஞ்சேலெனவுறாதிற்பயானுன்ற
னருமையறியாதவலமாய்க்
கஞ்சிகந்தைக்குமற்றறிவற்றூக்கியற்று
கடையரிற்கடையனானேன்
றஞ்சமுன்றஞ்சமேற்கைவிடாதெமைமுற்றுந்
தற்காத்தருள்புரிகுவாய் (3)

என்வழித்தெய்வநீயென்குலக்குருவுநீ
யெனைநாளெலாங்காத்தரு
ளென்னைநீதந்தைநீயாதாரவாதேய
வாதியந்தமுநீயன்றோ
வுன்பதவிணைக்கேயென்னுடலுயிர்ப்பொருளெலா
மொப்பித்துன்செயலின்முற்று
மன்னவடியேனென்னைமருவியவியாகுல
வழியுநினதேயல்லவோ (4)

பரநின்றாதைக்கெனினும்பரைநின்றாயர்க்கெனினும்
பால்வாரியிற்கண்வளர்
மரையுறழ்விலோசனநின்மாதுலநன்மாற்கெனினு
மாமிமாவுக்கெனினுமே
யுரைதரும்படவேட்டுத்தாய்முதலெவர்க்கெனினு
முறிலியானபராதியா
யரியநீயனைவர்க்குங்கண்ணாயிருத்தலா
லடியனைமன்னித்திடவருள் (5)

பழிபிழைகளபசாரங்குறைகுற்றமணுகுறாப்
பான்மையினடந்துகொள்ளுந்

சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்

திருமுருகர் திருவடிச்செய்யுட்டொடையல்

சழிசக்தியில்லையேகடையேன்சுதந்திரங்
    கவலைகூர்முடிவுறுமெனத்
தழைநினதுதண்ணருட்கேயீந்ததன்கணே
    தமியேனடந்துகொண்டு
மழுமாறுவந்ததேனற்புதக்குமரேச
    வழுகையாவுந்தீர்த்தருள் (6)

என்னலமிங்கணுவேனுமிலையெனினுமென்முனோ
    ரினியநலமாயினுங்கொண்
டன்னைதந்தையர்குருத்தெய்வநீயாகிநின்
    றநவரதமுங்காத்தருள்
பின்னுமோர்பழிபவக்குறைகுற்றமணுகாது
    பெரிதுமாண்டருளியுனது
பன்னரியபதநீழலுந்தந்துநாளெலாம்
    பரிபாலனஞ்செய்தருள் (7)

உயிர்க்குயிரதாகிநீயுற்றுநின்றென்றந்தை
    யுடன்முதலென்னுடலளவுமே
யயர்வியாதிகபரமனைத்துமீந்தாண்டுவரு
    மற்புதநின்னருமையாதி
யுயர்வுசிறிதறியாவுலுத்தனேனெனினுமியா
    னுன்றாட்டொழும்பாகையாற்
செயலெலாநின்செயற்கேகொடிவ்வெளிஞனைச்
    சேர்திருத்திக்காத்தருள் (8)

மெத்தப்பயந்தவன்மேதையில்பேதையன்
    மேன்மையங்குணமிலாதேன்
சுத்தமுமிலாதவன்றுயருறும்வழியலாற்
    சுபமுறும்வழியோர்ந்திருப்

திருமுருகர் திருவடிச்செய்யுட்டொடையல்

பித்தனேன் வெள்ளம்வரு மூன்னரணைபுரிகெனப்
பிரபஞ்சமுறைசெய்யுநற்
சத்தங்காதிற்கேட்டுங்கேளானைப்போலுறுஞ்
சண்டியேனைக்கைவிடேல் (9)

பட்டபாடருளறியுமினியந்தப்பாடுபட
பாவியேனால்முடிவுரு
கஷ்டமியாவுந்திரக்கடவுட்சிரோன்மணியுங்
கருணாகரக்கண்பாரா
யிஷ்டார்த்தமியாவுமன்பர்க்கருளுன்வள்ளன்மை
யென்பாலுமுறுவித்தரு
ளஷ்டதிசையிலுமியாண்டேந்தனியரசுனுற்றிடு
மாறுநநத்தெந்தையே (10)

ஞானமாம்படிவநீஞானகற்பகநீமெய்ஞ்
ஞானதேசிகமுதன்மைநீ
தேனெனவெனக்குனின்றுனதுதிருவடிநீழல்
சேர்மரபனைத்துநன்று
யீனமறசம்பிரதாயச்சுவானுபவமா
யெளிதினிலனுக்கிரகித்தாய்
நானுனைமறந்திடினுநீயென்னைமறவாம
னலமேயளித்தாட்கொள்வாய் (11)

கடனுனக்கேமுழுதுங்கடையேனைக்காத்தருளக்
கடையனடிமைத்திறத்தால்
மடமையேனின்றிருவுளக்குறிப்பினிலுறு
மாசினேனெனினுமடியே
னுடையநீயுன்றிருவுளக்குறிப்பின்கணே
யுறுவித்துன்னருளெனக்கின்

கடைவிக்கவேண்டுமென்னப்பனேயில்லையே
லடியனாலாற்றொணாதே (12)

நம்பினேனென்னைக்குநினதாட்டுணைபுணைகள்
ஞாலத்துமற்றிடத்தும்
வெம்பவெனைவிட்டிடாதலறவும்விடாமலே
வேதனையொன்றும்விடாமற்
றம்பிராநீயனைத்துக்குமுன்னின்றெமைத்
தற்காத்தருள்புரிகுவா
யிம்பரும்பர்கள்பலருன்னம்புஜத்தாளடைய
யினியவையெலாநல்குவோய் (13)

புவிமிசைநின்னருள்வெள்ளம்பூரித்துறத்தேறிப்
புவிவாழ்க்கையும்வாய்ந்துமேற்
பவசாகரங்கடந்துறுபதமும்வாய்ந்தபேர்
பகரிலளவிலாதற்கே
நவநவமதாநூற்களனுபவம்பலவுமுள
நாயினேனோதலழகோ
தவமணுவென்பாலுறினுமின்றெனினுங்கைவிடேல்
சாட்சாத்சிவத்தோன்றலே (14)

அற்புதமகாமகிமைமூவருரிமையுமுனக்
கார்ந்துறவங்கவர்சீரெலாம்
பொற்புறுநின்பாலுறநின்றுணம்பினோர்க்கரிது
புகலுமிருமையிலுமுளதோ
தற்பராபரநிராமயசந்திரசேகரச்
சம்புசாம்பவிமகிழ்தாரச்
சிற்பொருளதாம்பிரணவப்பொருளினுட்பொருளைச்
செப்பியருளியதெய்வமே (15)

மாங்கனிக்காயிமையினுலகைவலம்வந்தவ
மாவீரசூரதீர
நீங்கருநிசாசரர்த்திரளெலாம்பானுமுன்
னேர்பனியதாயொழியவு
மோங்கமரரோடுலகம்யாவும்வாழ்வுற்றிடவு
முயரருட்கண்பார்த்தவ
தாங்கியருள்வாயெனையுமென்றன்சார்பினரையுஞ்
சலனமணுவுமுறுமலே (16)

பில்லிசூனியம்பேய்பிசாசபூதம்பகைப்
பீடையாதியசத்துருக்
கல்லலொன்றணுகாமலருளுருத்தெருளுருக்
கடவுணின்னுருமயமதே
சொல்லிருமையினுமெனைச்சூழ்ந்துமேலிட்டுறத்
தூயருட்கண்பார்த்தருள்
பல்வகையவெழிலிலக்கணநிகரில்சௌரியம்
பரிபாலனம்பலவுளாய் (17)

கும்பமுனிநக்கீரரருணகிரியார்முதற்
கூறருமகான்கள்பலரை
வெம்பலறவாண்டருளினையெனையும்வ்வாறு
மேன்மைநீதிருவுளங்கொண்
டம்புவிக்கண்ணுமறுமைக்கண்ணுநின்பே
ரருட்கடல்சுரப்பவாண்டு
எம்பிரானொருநின்றனரியதிருவடிநீழ
லெய்துவித்தருள்புரிகுவாய் (18)

குழவியின்மழலையிற்குற்றங்கொளாதுட்
குளிர்ந்துளமகிழ்ந்திடுதல்போ

லிழிவுரையதாகுமென்னுரையினிற்குறைகுற்ற
மேதறினுமன்னித்தருள்
வழிவழியதாயெமைப்பாதுகாத்தருள்புரியும்
வள்ளலெக்குலதெய்வமே
தழைமறையினீற்றெளிருமாதேவர்மாதேவி
தம்பெயர்விளங்கவந்தாய் (19)

திருவண்ணாமலை

திருவண்ணாமலையினெல்லைசார்போது
தீனனேனுவகைகூர்தரநல்
லுருவுறுகௌமாரப்பருவத்தி
னொளிசெறிபுருடராய்த்தோன்றி
யரியநின்காட்சியுபசரிப்பின்சொ
லனைத்தையுமீந்தநின்னருடான்
பெரிதுமென்பாலெஞ்ஞான்றினுமுறச்செய்
பிரம்மசாட்சாத்சுப்பிரமணியே (20)

சிதம்பரம்

சிதம்பரந்தனினீயிருந்தவாறிருந்தே
திகழ்நெடுவேற்பிரயோக
மிதமுறச்செய்தென்னிதயவெவ்வவல
மெவற்றையுமொழித்தனைமகிழ்ந்தேன்
சதமதாகியவென்குலகுருவேயென்
றந்தையைக்காத்தவென்னுதா
நதிமதியணிந்தசிதம்பரேச்சுரரி
நல்லருளால்வெளிப்பட்டோய் (21)

தண்ணளியாலென்னிளம்பருவத்தித்
தரணியேபரமலாலிலையென்

றுண்ணெகிழ்தர வென்னுணர்வினிற்றோன்ற
வுணர்வினுக்குணர்வதாய்நின்றே
யெண்ணுமுப்பாலுமப்பாலுமான
வெவையுமென்னுளத்தினிலுதிக்கப்
பண்ணியங்கவைகளனைத்தும்பன்னூலின்
பார்வையாலுந்திரப்படுத்தி (22)

தானேயென்னுள்ளந்தனினிலைநின்றத்
தற்பராபரம்பரையொன்றும்
ஞானாகரத்துப்பிரணவமீது
நவிலுமிப்பிரணவந்தன்னில்
வானாகிநின்றபரமஃதிதனில்
வருபரையஃதிதேமருளி
லானமையாயசசிவபரங்க
ளனைத்துமாய்விளங்குவதென்றும் (23)

பங்கமாய்ச்சில்லோர்பரமிலையாவும்
பகருழியியற்கையேயெனினு
மங்கதைமடமையறிவெனவகற்றி
யயர்ந்துநின்னருண்மறவாத
சிங்கத்தின்றீரமளித்தெனையிம்மாத்
திரங்கொடுபோந்தவிட்டருணீ
மங்குறுமடமையகற்றிமாசகற்றி
மயர்வினையயர்விளையகற்றி (24)

நடஞ்செயுந்திருச்சிற்றம்பலத்தெந்தை
நல்லருளுந்தாயினருளு
முடையவேழமுகாருளுமுன்னருளு
முயர்மாலினருடிருவருளு
மடியனுக்குறநீரனைவருமென்பா
லனவரதமுநிகழ்தரவு

சகலாலயசங்கிதானஸ்தௌத்தியமான்மியம்
திருமுருகர் திருவடிச்செய்யுட்டொடையல்

மிடையருதெண்ணுதனைவெணியேங்கி
யிடிதுயரெலாம்விடுபடவும் (25)

தடைசெயாதளித்தென்ஜனனசுபாவச்
சார்பதாயென்னைவிட்டகலா
வுடனிகழ்ச்சியதாயென்றுநீயென்பா
லுற்றிடயான்பெற்றபேறின்
இடையகல்வியாமலெய்துதற்கருநும்
மின்னருட்டுணைபுணைவழியாய்
முடிவதாமுனதுதிருவடிநீழன்
முகடேறக்கடைக்கணித்தருள்வாய் (26)

(வேறு)

நீயேபிரமமெனமறைக
ணிகழ்த்தலவையவ்வாறியம்ப
லாயசீவன்றனையன்றங்
கவனையவைவயிலட்சியா
மேயவவன்றனுதார
மெய்ம்மைப்பொருளேயென்றிச்
சாயுஞ்சீவன்றன்னையுமே
தானோர்பொருளாய்நவின்றிடுமோ (27)

என்றேயடியேன்மதித்திடவு
மெழில்கூரண்டம்பலவுமென
தோன்றுங்காரணந்தன்னை
யுற்றபடிவமென்றுணர
வன்றேயடியேனிளம்பருவத்
தளவிலுணர்வினூற்றளித்தாய்
வென்றிவடிவேற்செவ்வேணீ
விட்டிடாதமுற்றுமருள் (28)

அழகியவள்ளிதெய்வானைத்தாயர்கடிருவடித்

தியானச்செய்யுள்

விருத்தம்

திருமாலளித்தசிரோரத்னச்
செல்வியேதெய்வப்பிடியே
யிருஞாலத்தைத்தோற்றுவிக்கு
மிறைமைப்பிரமனுதியருந்
தெரியவரியபிரணவத்தைச்
சிவசாட்சாத்காரத்தகைக்கு
விரிவாயன்றோர்மகிழ்ச்சியுற
விளம்புங்குருநாதப்பிரபுவை (1)

தெய்வத்திறச்சிந்தாமணியைத்
தேவேந்திரற்குந்-தரு-நீழ
லுய்யும்படிக்கங்கருள்செய்த
வுயர்வுகூரெம்மிளஞ்சிவத்தை
வெய்யசூரனுதியர்கள்
வேரற்றொழியவேல்விடுத்த
துய்யசௌரியத்தகையைத்
தோன்றாத்துணையையிணையிலியை (2)

அகலாதவர்தன்னிருபாலு
மமர்ந்தேயவரோடனவரதந்
தகைநும்பங்கஜச்சரண்சார்
சந்ததிக்கூட்டங்களெலா
மிகவும்பிழைத்துப்போகவருள்
மேலாமுமதுமகிமைசொலத்
தகுதியில்லேனெனினுமெனைத்
தற்காத்தருளனுங்கடனே (3)

திருமுருகனொச்சரிக்கை

ஓம்மகாகணபதேயநம:

## திருமுருகனெச்சரிக்கை

திருமாமறைபொருநான்குமைதெய்வச்சிவபெருமான்
புணையோடினிதருள்செய்யிளம்பரமேயெச்சரிக்கை (1)
மறைநான்குபநிடதாகமமாண்பார்கலைபலவு
மறைதன்னுருவாய்வந்தவவரசேயெச்சரிக்கை (2)
ஜகத்காரணசாட்சாத்சிவந்தனக்கேபிரணவத்தி
னகத்தாம்பொருள்பகுத்தேயுரையடிகேளெச்சரிக்கை (3)
குருவிற்றிறக்குருவேயுயர்குறுமாமுனிதனக்கும்
பெரிதுங்கலைக்கியானத்தருள்பெய்தாயெச்சரிக்கை (4)
தவநாயகிசிவகாமியென்சாட்சாத்தெய்வதாயுள்
ளுவக்குநடைபலவுமுடையொருவவெச்சரிக்கை (5)
திருமான்மகிழ்ந்தருள்செல்வியுந்தெய்வப்பிடிமணியு
மிருபாலுறமயின்மீமிசையிவர்வாயெச்சரிக்கை (6)
நெடுவேல்கரநிலவயாமநிசழ்த்தமுயர்சேவற்
கொடியோங்கிடவருபேரிளங்குமரவெச்சரிக்கை (7)
வானோர்க்குழுகளிகூரவும்வன்மையரக்கர்குழாந்
தானுய்மடிதரவுமருள்சாமியெச்சரிக்கை (8)
சிருஷ்டித்திடும்பிரம்மாவுமேதியங்கிமயங்கிடுமோ
ஒருமைப்பொருள்வினவியருளரியோயெச்சரிக்கை (9)
அடியேன்மடமையினேனலமறியாக்கொடுமையினேன்
சடையேன்கன்மியெனினுமெனைக்காப்பாயெச்சரிக்கை (10)
ஈந்தேனியாவுநின்பேரருட்கீந்தாங்குநின்னடிக்கே
போந்தேனெனைத்தற்காத்தருள்புண்ணியவெச்சரிக்கை (11)

———.

உ

ஓம்மகாகணபதேயநம :

## சிதம்பரநடேசர் திருவடிச்செய்யுட்டொடையல்

### ஆசிரியப்பா

திருவளர்கற்பகச் செழுந்தருவினுமுயர்
பெருங்கொடைவிநாயகர் பிரசவாரிசத்தா
ளணிதிகழோராறுநனர் துணைவியர்
புணையுறழ்மலர்த்தாள் பூரணபுராதனக்
கண்ணுதறிருத்தாள் கௌரிபைம்பொற்று
ளெண்ணுந்திருப்பதி யிறையிறைவியர்தாள்
கலைமகளின்றாள் கவலைதீர்ந்தின்ப
நிலையுறு பெரியர்தா ணேயமெய்யடியர்தா
ளெனைப்பயந்தோர் முதலெழிலறிஞர்கடாண்
மனத்துமுப்போதும் வாழ்த்திவாழ்குவமே

### ஆசிரியவிருத்தம்

கங்கைமதிதிகழ்தருஞ் செவ்வேணியின்மாண்புங்
        காமர்நுதல்விழியின்மாண்புங்
கதிர்மதிகளைநவில்விலோசனங்களின்மாண்புங்
        காதிணையிற்குழையின்மாண்புந்
துங்கமறையுரைசெயும்பவளவாயின்மாண்புஞ்
        சொன்மாண்புங்கந்தரத்திற்
றோன்றுகறையின்மாண்புமான்மழுக்கரமாண்புந்
        தொன்மையெம்பராபரைத்தாய்
அங்கமதிலொருகூறதாகியுறுமாண்புமிடை
        யணிபுலித்தோன்மாண்புமெய்
யனைத்தினும்விபூதியொடுகண்மணிகள்செறிமாண்பு
        மரவினாபரணமாண்புக்

சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்
சிதம்பரநடேசர் திருவடிச்செய்யுட்டொடையல்

தங்கம்பலத்துநீ யுறைமாண்புமடியருறு
தாளிணையின்மாண்புங்காட்டாய்
ஜகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (1)

மூவர்க்குமுதல்வராய்முத்தொழில்கொள்மூவராய்
முடிவிலின்பக்கடலதாய்
முன்னிற்குமுயர்பேரொளிப்பராபரசிவவெம்
முதல்வவென்விண்ணப்பங்கேள்
தேவதேவர்க்குமொருதேவமாதேவநீ
சின்மாத்திரப்பொருளுநீ
சீவகோடிகணினதிங்கலிலநிலமுநின து
செல்வநினதல்லனினதே
பாவியேனெந்தஞான்றுன் றிருத்தாணிழற்
பாக்கியவிருப்பிழந்து
பவசாகரத்தினிடைதவவாய்மையற்றவுடல்
பலவெடுத்துழலலானேன்
ருவுமஞ்ஞான்றுமுதலிதுகாறுஞ்செய்பிழைகள்
சகலமுமன்னிக்கவேண்டும்
சகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (2)

தந்தைதாயனாயீண்டுகண்டுளமகிழ்ந்துவெகு
சந்தோஷமாயிருந்தேன்
சந்தையிற்கூட்டமாயினரவர்களெனையிந்தத்
தரணியிற்கைவிடுத்து
எந்தைநின்னருளினலிம்மைமறுமைக்கண்ணு
மெனவிட்டகன்றிடாத
வினியதாய்தந்தைநீ குருவுநீ தெய்வநீ

யென்றறிந்தேனுயினு
நொந்துதடுமாறுமென்சிந்தையாகுலமறிவை
நுவலவும்வேண்டுமோதா
னூலாகமங்களுயர்மறைகள்பலகூறுகினு
நோய்செயாநின்றனுனருள்
சந்ததமுமெவர்பாலதாமோவவர்க்கே
தரிசனந்தருபெரியவ
சகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (3)

பாவியேன்மனதறிந்துச்செய்தபாதகம்
பலவுமுளவெனினுமுந்தன்
பகரரியதிருவருளுணர்த்தவவையாவுமியான்
பதைபதைத்துண்ணடுங்கி
யாவிக்குளாவியாய்நின்றிலகுநின்னருளி
னந்தரங்கந்தெரிகிலா
தந்தோகெட்டேனென்றழுங்கவுறலல்லாம
லாற்றுஞ்செயல்வேறிலேன்
றாவியெனையாள்வையோசண்டாளனென்றெனைத்
தள்ளிக்கைவிட்டிடுவையோ
சந்ததமுநின்றிருத்தாணீழல்பெறுவெனோ
தாழ்நிரயமேயுறுவெனோ
சாவுதலைமேலிருக்கின்றதேயென்செய்வேன்
சச்சிதாநந்தநாதா
சகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (4)

அண்டபிண்டங்களிலுமேகவுருவாகிநீ
யைந்துதொழில்களுநிறைவுற

சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்
சிதம்பரநடேசர் திருவடிச்செய்யுட்டொடையல்

வற்புதநன்மன்றத்துளானந்தநடனமிடு
மந்தணனின்னருமையான
பண்டையநல்வடிவினைக்கண்டவர்களியாவரோ
பழமறையுங்கைவிட்டதே
பார்க்குமெய்ந்நூலுமனவாக்கிற்குமெட்டாநின்
பரமரகசியமென்னுதே
எண்டிசையுமேல்கீழெலாம்வல்லசித்தனீ
யெளியவற்கெளியவனுநீ
எய்தினாக்கைவிடாக்கருணைநிறைகடவுணீ
யின்பவெள்ளக்கடலுநீ
தண்டனிட்டுன்னருட்கண்டுகுறைதீருமிச்
சமயமெனைவிட்டிடாதே
சகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (5)

போகமோட்சங்கணின்னருளலாதின்றெனப்
புகலுமுயர்மறைகளெண்ணிற்
புண்ணியசுதந்தரப்பொருளுநீயருளுநீ
புன்மையேனின்னடிமையே
ஏகமேவாத்வைதபிரமமென்பதுவுநீ
யெவையுமாயல்லவாகி
யெங்குநிறைகடவுணீவேங்கடாசலபதி
யெனவெழுந்ததுநின்னருளே
சோகமென்சொல்லுகேனையகோகொடியபாழ்ஞ்
சொற்பனமதென்சொல்லுகேன்
றுயரையென்சொல்லுகேனயர்வையென்சொல்லுகேன்
றென்றுதெலாந்தோன்றயான்
றுகமாய்நின்னருளுறற்குநின்றுளிணைத்

தஞ்சமானேன்கைவிடேல்
சகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (6)
செஞ்சுடர்ப்பரிதிதன்கிரணமோராயிரஞ்
சேரயாண்டும்பரப்பித்
திகழ்தரினுமவ்வொளிவிசும்பினுறலரிதாகிச்
சேணளாந்தருமுடியினு
மஞ்சுகன்மீதினும்விசேடமாயவையினு
மதிகமாய்க்கண்ணாடியி
லறையதனினும்படிகக்கல்லினூடுருவிடைய
யவிர்தராநின்றதனினும்
விஞ்சையுறுபானுகாந்தத்திணையில்தெளிவொளியும்
வெம்மைவெண்மையுக்காட்டல்போல்
வியக்குநின்னுருவுமுறைமணிதர்தபசிகடேவர்
விழைந்திடுமிலிங்கத்தினுந்
தஞ்சச்சுயம்புலிங்கத்துநின்றருளுந்
தண்ணருளனைத்துங்காட்டாய்
ஜகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (7)
கொடியபாழ்கிரயதுயர்மறுமையிலுமிம்மையிற்
கொடியதுக்கானுபவமுங்
குணக்கேடுபேர்க்கேடுசீர்க்கேடெலாந்தந்து
குன்றுவித்திடுமெந்திய
மடமாதர்தஞ்சார்புநாணின்மகளிர்ச்சார்பு
வதுவையில்பெண்சார்புமே
வறிஞனேன்றனையுறுதாண்டுகொளலுன்கடன்
வாசாமகோசரத்தாய்
இடையிடையென்னிலைமைகெடவெங்கிருந்தோவெதோ

சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்
சிதம்பரநடேசர் திருவடிச்செய்யுட்டொடையல்

வெந்தெந்தவாறதாயோ
விடும்பைகூரொண்ணங்கள்பலவுதித்தெளியேன்ற
னிதயமாசுறவாட்டுது
தடைகளிவையணுகாதசந்ததநின்றுணிழற்
சம்பந்தமேயருளுவாய்
சகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சந்சிதம்பரவெந்தையே (8)

சாவகாசத்தோஷஞ்சகலமுந்தோஷமே
சாவகாசத்துநன்மை
சகலத்துநன்மையெனலனுபவப்பிரத்தியட்ச
சமாதானமாகுதலினு
லேவல்செய்யாததற்சாவகாசத்தொடர்நி
னின்னருளுறற்கேதுவா
மினியசற்சாவகாசத்தையேயருளுதனி
னின்னருட்கடனுகுமே
பாவவெம்பொய்களவுபுலைகொலைகளாதிதொழில்
பகரிருமைநலமுங்கெடப்
பண்ணிவாட்டுஞ்சத்துருக்களாய்நிற்றலாற்
பாலநீயவ்வழிகளிற்
றுவிடாதேயென்றுயிர்க்குயிரதாகிநீ
சந்ததமுணர்த்தியாட்கொள்
ஜகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (9)

சோதனைகடாள்கிலேன்சோதனைசெய்ததுபோதுந்
துரியதுரியாதீதநின்
றொண்டனெனையாண்டநீமுற்றும்வருத்திடிற்
றொழும்பனேன்றுளவசமோ
வேதனைகளிற்றைநாட்பட்டதென்சொல்லுகேன்

விமலநின்னருளறியுமே
வேதாந்தசித்தாந்தசமரசசுவரனுபவ
வேத்தியநின்னருளன்றியே
ஏதசையுமுடிவின்கணைவையுநின்செயலதா
யிருக்குமல்லால்வேறிலை
இனியேனுமாண்டுகொளநினையாதுவிடுவையே
யென்கதியதோகதியதாம்
சாதக்கடேடுயிர்ப்பொக்கிஷசம்பாத்தியமே
சகசானுபூதிவாழ்வே
சகதீசபரமேசசாட்சாத்சுயம்புவே
சற்சிதம்பரவெந்தையே (10)

விருத்தம்

(வேறு)

அகத்துறுமன்றஞ்சனனசுபாவ
மாயுமென்னகத்தினினின்றுந்
தகைநினதருளாற்சாலவுமருளித்
தற்காத்துவருநின்றாயெனினுஞ்
சகத்துறுமன்றங்காண்பதற்கின்றிச்
சாலவுநினைத்திருந்தேற்குன்
மகத்துவவருளால்வருவித்துயாவும்
வழங்கியவுரிமையென்சொல்கேன் (11)

இகத்துறுதாயர்தந்தையர்தமக்கு
மிராதிராதத்தகையுரிமை
மிகவிருத்திடத்தேவேண்டியவேண்டி
யாங்கெலாம்விளைந்தளித்தருணீ
சகத்துநின்மன்றத்தெல்லைசார்போதியான்
றமியனேன்மெய்ம்மறந்தளவில்
சுகக்கடல்படியத்திருவுளங்கொண்டுத்
தோன்றனைபிதாநீவிர்வாழி (12)

தோன்றுபோதிருவீராங்கனுக்கிரகித்த
 தூயனுக்கிரகமறப்பேனோ
சான்றவென்னுயிர்ப்பொக்கிஷங்களாதெய்வத்
 தருவினுஞ்சால்பரம்பரைகா
ளான்றநுங்கருணையடியன்பாலகலா
 வாறமர்வித்திடல்வேண்டுங்
கான்றசோறென்னக்கண்டனைத்தையுமுங்
 கழலிணைக்கேசித்தமானேன் (13)

மயக்கமொன்றடுத்துமாழ்குறும்போது
 மைந்தநீயயர்வுறேலுனக்கே
யியற்கையக்குருதண்டாயுதபாணி
 யென்றவர்தன்னைக்கையேந்தி
யயர்வகற்றிடுநீறணிந்துகண்மணிப்பூண்
 டந்தணரானவுருக்காட்டித்
தியக்கங்களியாவுந்தீர்த்தருளியநீ
 சிறியேனைமுற்றுங்காத்தருளே (14)

நின்னுயர்பரிபாலனமுபகார
 நேர்ச்சிநற்றுணைப்புணைத்தன்மை
யென்னுயிர்க்குயிராயிருந்தருளனைத்து
 மெளியனேன்மறப்பனோவயர்ந்து
மன்னைநீபிதாநீகுருதெய்வநீயே
 யம்பலத்தனேகருக்கியாக்கை
தன்னொடுமுத்திதந்தளித்ததுபோற்
 றமியேற்குமீவதுன்கடனே (15)

படைத்தகாப்பாடுபட்டுளேனந்தப்
 பாடெலாந்திருவருளறியு
முடையவவடியேனாதனமன்றே

யுன்வழியடிமையேயன்றோ
தடைசெயாதாண்டுகொண்டருள்புரிவாய்
தற்பரசிற்பரமானாய்
படையலாதியவைந்தொழிற்குறுதலைமைப்
பராபரதராதலவரசே (16)

மழைநாளதாயுமழையிலாதறயான்
மருவுநாண்மன்றத்தினெல்லை
தழைமழைபொழிவித்தனைவெயிலொருபாற்
றுனுறவதிசயம்பூப்ப
தொழுதிருமுனரியானுறுதினமுன்பே
தொண்டனேனுற்றிடத்தேயே
பழமையக்குற்றவெலாமியலுருவிற்
பாவியேற்களித்தநீவாழி (17)

தொடையலீதடியேன்சொற்றபோதினையாய்
தொடையலென்றிடுபெயர்தனினு
மிடலாஞ்சடாடவிச்சுந்தரமெனும்பே
ரொன்றனையபிநவந்தோன்ற
கடையனேன்றனையுமோர்பொருட்படுத்திக்
காத்தருளெம்பிரானேநின்
னுடையபேரன்புக்கெம்மனோரன்பு
தொருதினையளவுமொவ்வாதே (18

மக்களுக்கின்றூர்மாட்டுறுமன்பின்
மக்கண்மேலின்றவர்க்கதிக
மிக்குவலயத்திற்காண்கிறேந்திணையோ
ரிரண்டினுமிணையினுமிருவர்
மிக்கபேருளினன்பெம்பாலபரி
மிதமலாற்குறைவன்றேகுறையி

லெக்கதியாவேமோவடியேமிவ்
விருண்மருண்மகிதலத்தன்றே (19)

ஈன்றதாயிழந்தேன்றந்தையையிழந்தே
னென்னெடுற்றவரையுமிழந்தேன்
றோன்றவரெல்லாஞ்சந்ததியிற்கூட்டத்
தோற்றமேயாயினர்திகைத்தே
னூன்றநீபிதாவாய்நின்னிடபாகத்
தம்மணியன்னையாயுளீரொன்
றூன்றுமுன்னூலாதியவழிசார்பென்
றுரைக்குநூலியாவுமேபுகல (20)

அகிலமுஞ்சாட்சியாகவாலயங்க
ளளவிலாதுறவடியர்சூழாந்
தகுபெரியவர்களிருடிகண்முனிவர்
சற்சித்தர்முத்தராதியரும்
வகைவகையுலகுற்றளவிலற்புதமு
மாண்புநூற்பலவுஞ்செய்துறலோ
டிகத்திடையனேகருடலொடுமுத்தி
யெய்துபிரத்தியட்சமுமிருக்க (21)

மார்க்கண்டர்நாயன்மார்நால்வராதி
மகான்களத்தாட்சியுமிருக்க
கார்க்குநீயனுபவப்பெரியருக்குக்
கரதலாமலகமாயுறமேற்
பார்க்குநூற்பலவுமொருநெறிபகரப்
பகருமந்நெறியந்தரங்கஞ்
சேர்ச்சிவநீயாயுறவென்றன்மரபுஞ்
சிவமரபாயுறவதினும் (22)

அனுபவப்பிரத்தியட்சங்கள்பலவு
மங்கையரமலகமாயிடநின்
றனதருடாயினருள்விநாயகரின்
றண்ணருள்சுப்பிரமணிய
வனைபிதாகுருதெய்வத்தருள்வேங்க
டாசலத்தவர்முதலடியே
னுனுமனைவோரினருண்மிகையாலிங்
குற்றனனுந்திருவடியே (23)

சிதம்பரந்தனிலுங்காளத்திதனிலுந்
திருவிரிஞ்சைப்பதிதனிலு
மிதமதாய்த்தோன்றியெந்தைநீயெனக்கங்
கீந்தருளனுக்கிரகவிசேடஞ்
சதமதாகவுமென்றுபசோபங்க
டணியவுஞ்சாற்றருநினதும்
நிதக்கலியாணிப்பெயர்புனையென்றாய்
நிகரிறண்ணருளெனக்குறவும் (24)

தராதலச்சராசரத்தொகையாவுந்
தன்றனியகத்துறத்தானே
பாரபரமாகித்தன்னருள்விளக்கப்
பான்மையேபராபரனாகி
யிராநின்றநீநின்றிருவுளக்குறிப்பி
னிரங்கியாண்டருள்செயக்கடனே
சிரோன்மணியனையாய்செழுஞ்சுடர்ப்பிழம்பே
சிவகாமிமணாளமாதேவே (25)

எந்தெந்தத்தலங்களடியனேனேக
வினியநின்னருளிசைவித்த
தந்தந்தத்தலத்தினெல்லையானனுகு

மந்தந்தவமையங்கடோறுஞ்
சொந்தமாய்க்காட்சிதந்தனுக்கிரகித்தென்
சோர்வெலாமகற்றியென்னுள்ளஞ்
சிந்தைதீர்தரச்செய்தானந்தக்கடலிற்
சேர்த்தருணின்னருள்வாழி (26)

அம்மணிசிவகாமித்தாய்பராபரை
யற்புதச்சிற்சத்திக்கென்மேல்
வெம்மைகூர்கோபக்குறைகளியாதுறினும்
வினையனேனேர்சிருவாகந்
தம்மையுமடிமைத்தன்மையுமெளிமைத்
தன்மையுமடமையுங்குறிப்பித்
திம்மையம்மையினுமியாண்டுமெஞ்ஞான்று
மிரங்கியாண்டருள்செயப்புரிவாய் (27)

நவக்கிரகநிலைமைவிரோதமேதுறினு
நவிலவையாவுஞ்சீர்திருத்தி
யவக்கேடலைச்சலழுங்கற்புழுங்க
லாறுமையாவுந்தீர்தரவே
தவப்பெரும்பேறுநீயுநின்பாலாந்
தையலுயகியென்றாய்தானும்
பவந்துயரணுகாப்பான்மையிற்காத்துப்
பரிபாலனஞ்செயல்வேண்டும் (28)

நின்னுயரருளாற்றலயாத்திரைக்கே
நேயனேற்குற்றநாளியாண்டு
முன்னரியானேகல்குறையிலாவாறு
முடிதரல்வேண்டுமேயென்றிங்
குன்னியெவ்வகையிலுஞற்றினுங்குறையே
யுறன்மிகையிற்புலப்படாதும்

மின்னருட்செயற்கேவிட்டெதிர்நோக்கி
யிருக்குநாளினியவற்புதமாய் (29)

சிதம்பரந்தனினீயிருந்தவாறிருந்தே
திருவண்ணாமலையைநோக்கிடவே
யிதவண்ணாமலையார்களத்துயர்மணிவேய்ந்
திடைபுயங்காஷாயநிலவப்
பதமுப்பதாண்டுச்சைவரிற்றோன்றிப்
பங்கஜக்கையினாலழைக்க
வுதவினாயெழுந்தேனயர்வெலாந்தீர்ந்தே
யுறுமிடத்தெல்லையாண்டுறுநீ (30)

மாணிடச்சைவவிருத்தர்போனாதலில்
வயங்கவெண்ணீறுகுங்குமமு
மீனமிலுடைகள்பலவுமார்ந்தங்கை
யிடைதடியூன்றித்தள்ளாடித்
தீனனேனெதிரிலுறவுணாமுலைத்தாய்
திருவமுதோடுறவுடனே
ஞானதேசிகவென்குலகுருமுருகர்
நடந்தடியாலிதம்புரிய (31)

கண்டனன்கண்டுள்ளெய்தியபின்னர்
கடையனேற்கதிகரித்திருந்த
பண்டையசாதற்றிரளெலாந்தணியப்
பாக்கியமியாவுங்கண்டுற்றே
னண்டியவிடங்கடேவதாவிடங்க
ளாங்காங்குமுபசாரமனேகந்
தொண்டுபோலாண்டத்தலத்தினரொருவர்
சோர்வறயாவையுங்காட்டி (32)

அருச்சகரனுகூலமும்வருவிக்க
வருச்சகரதிவிசுவாச
வுருவினராகியாகமநெறியி
லுயர்தரிசனைகள்செய்வித்தே
யரியநின்னருளானவக்கிராராதனை
யாற்றுவிக்கையிலிலும்பூதா
யிருதயத்தடியேன் குறையெலாந்தீர
வினியநின்னருட்பிரசாதம் (33)

அவர்கையினின்றுமென்கையிலுறயா
னடைகளிமிகுதியென்சொல்கேன்
சிவக்கொழுந்தேயென்றெய்வபொக்கிஷமே
தீனனேற்கனைபிதாகுருவே
பவக்கடலிடைப்பட்டுழன்றலைந்திடுமிப்
பாவியேற்கருண்மிகப்புரிந்தாய்
தவத்தெழும்பொலிவேதஞ்சமுன்றஞ்சஞ்
சதாபாலனஞ்செயல்வேண்டும் (34)

மாட்சிசேர்காளத்தீசனைக்கண்ணப்ப
வள்ளலைக்காணவுள்வாஞ்சை
நாட்பட்டிருந்துமுற்றுறுதிந்நா
ணாதநின்னருளினுலெய்த
வாட்கொண்டநீயேயக்குமன்ஞேஹர
வடியனேனெல்லைசார்போதே
சாட்சிநீயேயாய்க்கண்ணப்பவள்ள
றன்னிருகண்களுன்கண்ணுய் (35)

இலங்கிடவிமைத்துந்திறந்துநோக்கியுமுன்
னிலிங்கபேரியவுருகாட்டித்
துலங்குநின்கருணும்புஜவிழியெளிமைத்
தொண்டனேன்மீமிசையுய்த்தாய்

கலங்கலியாவுந்தீர்ந்தளவில்பேரின்ப
காட்சிபெற்றேன்கலிதீர்ந்தேன்
புலங்கொணின்னருளொன்றின்மையாயினர்க்குப்
புகலிருமையிலுமொன்றுளதோ (36)

போந்தநாடுவஜாரோகணநாளும்
புண்ணியவிழாநாளதாயு
மேந்தலாதியருமூறுநாளதாயு
மிவணீவிரிந்நாளிக்குறுதல்
காந்திகொள்விசேடமெனவத்தலத்தர்
கழறிடக்கேட்டுளமகிழ்ச்சி
யாந்திருநாளாயுறவந்தநாளி
லற்புதவெந்தைநின்னருளால் (37)

எமதுநேர்மைக்காமியல்பினரொருவ
ரெழிலாலயத்தொழிலாளர்
களையராங்குற்றஜனத்திரளிடையிற்
காமர்வேந்துறுவதன்முன்ன
ரமையமூலத்தானஞ்சேருவித்தாங்
கருச்சகரனுஜையார்வித்துச்
சுமைபவமகலத்தூயநின்பாதந்
துலங்கிடத்தரிசிப்பித்தின்னும் (38)

தாய்முதலாயாண்டுறுமளவிலாத
சம்புநின்னுருத்தரிசனைக
ளாயமற்றவையுமற்பொடுகோட்ட
வகமகிழ்ந்தேனஃதன்றி
நேயமாயொருவர்செலவொணாத்திறத்து
நீள்வரையெளிதினிற்செல்வித்
தோயவென்காதல்கண்ணப்பனுரி
னுருதரிசிப்பிக்கப்பெற்றேன் (39)

சிதம்பரநடேசர் திருவடிச்செய்யுட்டொடையல்

திருவிரிஞ்சையினிற்செல்லுநாளாங்கே
திகழ்தருமாறுநீர்நிரம்பப்
பெருகலுற்றிடையேசெலவொணாப்பிரவாசப்
பேற்றினதாகவாங்கிடையே
யொருகுறையெவர்க்குமின்றியெல்லோரு
முளையதன்களையணுகுவித்தாய்
திரும்புநாளுளத்திற்சிறிதுபீதியுறத்
திகழ்புனல்விலகுவித்தளித்தாய் (40)

ஐயமன்றத்தாயென்னுயிர்க்குயிரே
யாங்குவாழ்மார்க்கசகாய
வெய்யபாழ்ஞ்சோபதாபங்கடூர
மேன்மைநின்னருட்பிரசாதம்
பொய்யனேற்களித்தாய்மகிழ்ந்தனன்மகிழ்ந்த
புனிதவம்மகிழ்ச்சிபோயகன்று
நையுமாறுற்றகுறிப்பருளறியு
நவிலுமக்குறிப்பெனையின்னும் (41)

வருத்திடவருந்தும்வருத்தங்களெல்லாம்
வள்ளனீர்த்தருளாயேல்
பொருந்துசற்கதிவேறிலைநின்றாட்கபயம்
புன்மைதீரருள்செயல்வேண்டு
மருமருந்தன்னமரகதவல்லி
யம்மணியென்றெய்வதாய்க்கு
முரிமையின்றானவிதமெதோகாணே
னுலகதாய்க்குளமிரங்குவிப்பாய் (42)

படத்தசாப்பாபேடலானதேனே
பராபரம்பராபணாகரனோ
விடத்தகுபோதம்மடிக்கடிமையெனை
விள்ளருந்துயர்க்கடலந்தோ

சிதம்பரநடேசர் திருவடிச்செய்யுட்டொடையல்

மிடிப்பிணியாதியுளக்குறையனைத்தும்
விடுபடக்கடைக்கணித்தருள்வீர்
திடமெலாமகன்றுதத்தளிக்கின்றேன்
திருவுளமிரங்கிடவேண்டும் (43)

படவேட்டுத்தாயுமாமரகதவெம்
பராபரைத்தாய்முற்றும்வேறு
கடையனேர்திருவாகந்தெய்வத்தாயர்
கருணைகூருளமறியாதோ
விடப்படாவடிமையடியனேனன்றே
மிகமெலிந்திடவைத்ததேனே
மடையன்பாற்குற்றங்குறைகளியாதறினு
மன்னிப்பித்தாண்டருள்புரிவீர் (44)

செயலெலாமுமதுசெயலலாலெளிமைச்
சிறியனேன்செயலன்றேயனுவு
மயர்வென்றன்செயலினுறுமென்றிங்கடியே
னனைத்துநஞ்செயற்குவிட்டிருப்ப
தயைசெயாதொறுக்கிற்சகிக்கவல்லேனோ
சங்கரமாதேவசம்போ
நயம்பலகாட்டிப்பயமெலாமகற்றி
காளுமாண்டருளலுங்கடனே (45)

சைவசித்தாந்தப்பஞ்சகீர்த்தனையுஞ்
சாற்றருமன்றமான்மியமுந்
தெய்வநின்னருளாலடியனேனோர்கோசத்
திடைவரைந்திருக்குமோர்தினத்தே
மொய்யுறுகனவிற்றுய்யவந்தணர்பொன்
முருகுகூருருக்கொடுபோந்து
வெய்யயானெழுதியுளவவற்றென்று
வேண்டநீதருகவென்றந்தோ (46)

நினைந்ததோடெளிதினிகழுமிவ்வவத்தை
நிகழ்த்துறுங்கனவதாயிற்றே
நனியிவர்வேண்டலெழுத்தன்றேயெழுத்தை
நல்குதல்கனவினிலடாதே
யினியெனசெயலென்றேதுந்தோன்றாதிந்
நியானெனதெலாங்கலங்குறுகா
லெனைமுகநோக்கியொருதனிசெய்யு
ளீகிலாயெனினுமிங்கிதோபார் (47)

என்றுயர்புஜமீதிருந்தபொற்பட்ட
திடையநல்லிடக்கைமேலெடுப்ப
வொன்றியகக்கத்திடைமுனநவின்ற
வொண்பொருளுற்றவக்கோச
நின்றிடக்கண்டுவியந்தனன்பலவாய்
நினைந்தனனனவிடையுற்றே
னென்றதாநின்பேரருளிஃதென்றே
யுள்ளுறத்தெளிந்துளமகிழ்ந்தேன். (48)

ஆயினுமந்தப்பேருருளைவிட்
டகன்றிடிற்செயலெனவென்றே
நாயினேனுள்ளங்குழம்பிவாடுறுத
ஞதநின்னருள்விழியறியுந்
தாயினைநாடுஞ்சேயினைப்போலத்
தமியனேனெந்தைநின்றனையுந்
தூயவென்றாயார்தன்னையுநாடித்
துடித்தயர்தரற்கிரங்கிடுவாய் (49)

சிவகாமித்தாயார் திருவடிச்செய்யுட்டொடையல்

ஆசிரிய விருத்தம்

அணிதிகழும்வாக்கிற்குமனதிற்குமெட்டா
வகோசரசுயம்பிரகாச
வற்புதசதாஞானவாநந்தவெந்தைபா
லநவரதமுந்திகழ்தருந்

சகலாலபசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்

சிவகாமித்தாயார் திருவடிச்செய்யுட்டொடையல்

துணைவியெனம்மணிதராதலசராசரத்

தொகையெலாந்தோற்றுவிக்குஞ்

சுதந்தரிபராபரையுமாமகேஸ்வரிசிவை

தொண்டர்க்கிரங்கிநாளுந்

திணையிலவர்வேண்டுவனவேண்டியாங்கீந்துசிர

திசயவீட்டினுமெல்லவே

சேய்க்கதன்றாயினிப்பின்கணௌடதமீந்து

தேகபிணிதீர்க்குமுறைபோ

லணுகுவித்தகமகிழுமிணையில்கனிகரதெய்வ

வன்னையேசிவகாமியே

யானந்தமன்றத்துளாநந்தநடனமிடு

மப்பன்மகிழொப்பின்மணியே (1)

இருமையுநின்னடியார்க்களிப்பதுநின்னருளின

தியற்கையேயெந்தஞான்று

மீஸ்வரிநின்றுளிணையுறார்க்கெதுவுமில்லையா

யிடனுலகறிந்ததேயாம்

பெரியநின்னருளேயெவைக்குமாதாரமாய்ப்

பிறங்கலறியாமலந்தோ

பேதையேன்செய்பிழைகளைத்தணையத்தனையுநீ

பெரிதுமன்னித்தருளுவாய்

அரியமானிடசனனம்வாய்ந்ததுநின்னருளினு

லன்றிவேறன்றென்னினு

மஃதவிணடையுமெனின்மீண்டுமஃதுறலுமுறி

னடியிணைக்காளாவதும்

அருளினாலன்றிநின்றுதலாந்கைவிடே

லன்னையேசிவகாமியே

யாநந்தமன்றத்துளானந்தநடனமிடு

மப்பன்மகிழொப்பின்மணியே (2)

சிவகாமித்தாயார் திருவடிச்செய்யுட்டொடையல்

தனக்கிணையில்வித்தியாசக்தியுங்காவியத்
தமிழ்சொலுந்தாரணமுந்
தகுநிதிர்க்காயுளுமனைவிமக்கட்பேறுந்
தனதானியப்பெருக்கு
மினநலமுமாண்புநோயினில்வருந்தாவாழ்வு
மிடைகெடாதோரியலதா
மிதமுமேற்பதமுநற்புத்தியும்வேண்டுமெனி
லென்சித்திவளமொருங்கே
மனமகிழ்ந்தின்னும்வரவில்லையேமக்களென
வைத்துவழிபார்த்தெதிர்கொளு
மாகருணையங்கடற்றுய்கிலைமறந்துயான்
வையமிசையுய்குவேனோ
அனையுனக்கடியனேனடிமைசாதனமிதே
யன்புகூர்சிவகாமியே
யானந்தமன்றத்துளானந்தநடனமிடு
மப்பன்மகிழொப்பின்மணியே (3)

தாய்ச்சொல்லினும்பெரியவாய்ச்சொல்வேறின்றெனவுந்
தந்தைசொல்லினுமதிகமாய்ச்
சாற்றலொன்றின்றெனவுங்கூறுவதறிந்தநான்
றகையுமதுதிருவருளென்மேல்
வாய்க்குமாறொழுகாதுளஞ்சென்றவழியெலா
மதிகேடனுய்த்திரிந்து
வருந்துமென்வருத்தங்கள்பாபங்கள்சாபங்கள்
வகைகேடெலாமன்னித்து
ஏமயல்பினுங்கொடியநாயியல்பினேனெனினு
நட்டாற்றில்விட்டிடாம
லுனீயாளல்செய்யாவெனிலந்தோகெட்டே
னுனின்னடைக்கலமியா

திருச்சிவகாமியம்மன் திருவடிச் செய்யுட்டொடையல்

ஞேயவிகபரமுதலனைத்துமாய்நின்றருளு
மம்மணிசகநீஸ்வரி
யாநந்தமன்றத்துளாநந்தநடனமிடு
மப்பன்மகிழொப்பின்மணியே (4)

உலகினிற்றுயுந்தன்மகவழவுளம்பொறு
துறவணைத்துறுதுயர்கடீர்த்
துளமகிழ்வளல்லவோபரமதாய்நீயெனை
யொறுத்துக்கைவிட்டதென்னோ.
நிலைபிறழநெட்டுயிர்த்தத்தளித்துநா
னினையாதெலாநினைந்
தெஞ்சுபுண்ணுகியேயஞ்சலென்பாரின்றி
கெடிதுநொந்துறுமிவ்வேளை
தலைமைநீயஞ்சிடேல்மைந்தவென்றோர்மொழிச்
சாற்றியருளக்காண்பெனோ
சந்ததமுமன்பர்பானின்றருள்பராசத்தி
சாட்சாத்சகத்காரணி
யலகில்வேதாந்தநூல்புகலுமுயர்முக்குணத்
தன்னையேசிவகாமியே
யாநந்தமன்றத்துளாநந்தநடனமிடு
மப்பன்மகிழொப்பின்மணியே (5)

விருத்தம்

(வேறு)

உயிர்த்தொகையெலாமீன்றுவுடலீந்துவுலகீந்து
வுணாவன்மைதன்மைதோன்ற
செயிர்தீர்ந்தவறிவீந்துதுணையீந்துபுணையீந்து
திகழ்போகபாக்கியமீந்தே

சகலாலயசந்நிதானஸ்சௌத்தியமான்மியம்
திருச்சிவகாமித்தாயார் திருவடிச்செய்யுட்டொடையல்

யயர்வனுவுமனுகுரூநெறியுநீ இப்பேறிருமை
யடைதரக்கலைமறைபல
துயர்திரவருளியுங்காத்தருளென்றெய்வதாய்
தொண்டனேனைக்கைவிடேல் (6)

மலைமடந்தைமகாதாய்சத்திசாம்பவி
மாதேவிகௌரியையை
தலைமைமுக்கண்ணிமரகதவல்லிசங்கரி
சாட் சாத்சிவைபகவதி
யலைவுதீர்த்தருளரனிடத்தம்மையந்தரி
யபிராணியம்பிகையுமை
நிலைமைபார்வதிபரைபவானியாதியநாம
நிமலைநின்சரணமியானே (7)

உடனீயென் னுயிருநீயுன்னருளினுயேற்கின்
குறுவித்தயாவுநீயே
மடமையேன்கொடுமையேன்வகைதொகையொன்றில்லாத
மாபாவியெனினுமடியே
னடிமையானேனுன்றனற்புதாம்புஜவடிக்
கபயமபயங்கைவிடேல்
இடமெந்தவகையிலுமெனக்கில்லையம்மணி
தேற்றியாற்றிக்காத்தருள் (8)

தத்தளிக்கின்றேன்றியங்குகின்றேன்சிறிது
தயிரியமுமியாதினுமில்லை
யித்தனையினுக்குமறுமைக்குநின்னுயர்பாத
வினையையேஸ்திரமதான
வொத்தவாதாரமாய்ச்சுருதியாதியவானு
முன்னருளினுமோர்ந்தே
யுத்தமநின்றாட்கேயிங்கியானெனதனைத்துமீந்
துற்றேனெனைக்கைவிடேல் (9)

சிவகாமித்தாயார் திருவடிச்செய்யுட்டொடையல்.

அபயமெனினரனுமஞ்சுவன்விடற்கெவனெனினு
மாதிதாய்நீவிடலொவ்வா
தபநெறியுமின்றியேசற்றொடர்புமின்றியே
தவறுறும்பேய்ப்பான்மையே
சுபகரமதாயுனிச்சுழல்கின்றேனயர்கின்றேன்
சோர்ந்துமிகவாடுகின்றே
னுபகாரநீயுவந்தருளவிம்மட்டேனு
முற்றேனெனைக்கைவிடேல் (10)

இதயநீயாதலாலிதயத்தென்னெண்ணங்க
ளெல்லாநின்னருளறியுமே
ததியோங்குமீஸ்வரிபராபரைமகாதாயுன்
றாயருளினாலவையெலா
மிதமதாய்ச்சுபமதாய்நிறைவேறுவித்தரு
ளிடையூறுசிறிதுமற
சதமானவென்னுயிர்த்தாயகத்திரிகுணச்
சாட்சாத்பராசத்தியே (11)

இருமைப்பெரும்பேறெவற்றையுநின்னன்பர்க்
கிரங்கியருளெம்பிராட்டி
யுரிமையிக்கென்மேவிலாதொழிந்திட்டதே
னொருநீயெனைக்கைவிடிற்
றிருவற்றுமருவற்றுசீரற்றுபேரற்று
செல்கதியுமற்றவலமா
யருநிரயமேசதமதாயதோகதியேயிங்
காவேனெனைக்குறிக்கொள் (12)

தாயுநீதந்தைநீசகலநீநினதருந்
தண்ணருளினாலலாம
லாயுளித்தினையுமோர்சித்திமுத்தியுமில்லை
யம்மையிம்மைப்பேறிலை

சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்
சிவகாமித்தாயார்திருவடிச்செய்யுட்டொடையல்

தூயநின்றாளிணைகள்வழிபடவேம்பண்புடைய
தொண்டனேனன்றெனினுமியா
னேயயர்வுதளர்வுதாரித்திரமெலாந்தீர
நுவலருநின்னுளமிரங்காய் (13)

இனியநீயேயிரங்காவிடிற்கதியிலை
யேனென்றுகேட்பாரிலை
யனைக்குறுங்கனிகரத்தளவுதந்தைக்குமின்
றுயிலங்கவர்சேயர்பாற்
றினையளவுநினையலாற்கதியுமுண்டாங்கொலோ
தீனரட்சகியுயிர்த்தாய்
நினைதோறுமாதரவிலாவென்றன்வாழ்க்கையை
நெட்டுயிர்த்தேங்குமெனையாள் (14)

மன்றத்தின்கண்மகாநடனஞ்செய்யெம்பிரான்
மனதிற்கிசைந்தவென்று
யொன்றினேனின்னுயர்பதாம்புஜத்தோடெனை
யொறுத்தொழிந்திடுவியாம
னன்றியேயுருவானநின்பேரனுக்கிரக
நாயேற்கிரங்கியருளி
வென்றிகலமேயலாற்றோல்விதிமையதரு
விதமாண்டுன்னடிநிழற்சேர் (15)

சிவசிதம்பரேச்சுரரெச்சரிக்கை

புகழ்மாமறைமிகவேத்திடும்பொலிவேமிகுய்வலிவே
தகைபேரொளியுருவாயினாய்சம்போவெச்சரிக்கை (1)
ஆரோபமதாமியாவைக்குமதிஷ்டானமதானாய்
பேரோங்கியபரமசிவப்பெரியோயெச்சரிக்கை (2)
ஓரொண்குணத்தருவேயுயிர்க்குயிரேயுண்மைதிகழும்
பேரொண்ணிகர்தனவாய்ந்தசற்பேறேயெச்சரிக்கை (3)

அடியார்க்கனை தாதா குருவனைத் தாயெதிர்நின்றே
கடைபோம்வரைகாத்தாட்கொளுங்கண்ணுதாலெச்சரிக்கை (4)
பொன்னே நவமணியேயுயர்பொருளே திகழருளே
மன்னுநிரதிசயாநந்தவாழ்வேயெச்சரிக்கை (5)
பிரமானந்தச்சாட்சாத்காரப்பெருவாரிதியானாய்
தருமத்திரளேயாக்கையாய்ச்சமைந்தாயெச்சரிக்கை (6)
எல்லாம்வல்லவெந்தாய்தனக்கிணைவோரணுவில்லாய்
தில்லைப்பொதுவிற்றுண்டவஞ்செய்வாயெச்சரிக்கை (7)
தொழிலோரைந்துந்தோன்றமன்றிற்றூயநடம்புரியும்
பழமைச்செழும்பகவவாதிப்பரமேயெச்சரிக்கை (8)
அகரவுயிரனைத்தாமெழுத்தாயாகாத்திறத்திற்
றிகழுந்தெய்வமுதலேஹரசிவமேயெச்சரிக்கை (9)
உமையென்றெய்வதாயுண்மகிழொருவகாணற்கரியா
யமையப்பலநலமுமன்பர்க்கருள்வாயெச்சரிக்கை (10)
வேழமுகராறுநகர்விளங்கவிருபாலுந்
தாழப்பலருமையோடுறைதந்தாயெச்சரிக்கை (11)
தெருளேயதனருளேயுறுபொருளேவேதச்சிரம்வாழ்
பெரியோராவிக்குரியோயறற்பிறைசூடியெச்சரிக்கை (12)
வெண்ணீறணிந்தாய்கண்மணிவேய்ந்தாய்கொன்றைவாய்ந்தா
யண்ணுபரஞ்சோதியெனதன்பேயெச்சரிக்கை (13)
திரிநேத்திரசகத்காரணதேவாதிதேவமகா
வொருதேவவென்றனதாவற்களுறுவிப்பாயெச்சரிக்கை (14)
நின்றாளிணையேயென்கதிநிமலாபெருந்தகையே
யென்றைக்குமேயென்பாணின்றாளிறையோயெச்சரிக்கை (15)
சிவகாமசுந்தரியம்மணிதிணையாதியமுதல்வி
நவவற்புதசகத்பாலனிநாயகவெச்சரிக்கை (16)
அருமைப்பெருமைச்சற்குணவனையிற்பெருஞ்சுகுணப்
பணாபாகவென்னுயிர்த்தாகமேபதியேயெச்சரிக்கை (17)

செழுமைதிகழரதநங்கள்பலவுநாளுஞ்
சேய்ஞாயிறெருகோடிசூழ்ந்ததென்னத்
தழைதருநல்லொளிபரப்பவுயர்பைம்பொன்னாற்
சமைந்தமகாமௌலிசிரந்தனில்வயங்கத்
தொழுதறுவார்க்கருள்சுரக்கும்விலோசனங்க
டொழும்பர்கண்மேலெஞ்ஞான்றுந்துலங்கிநின்று
அழுகையெலாமாற்றிநிற்கவனைபிதாவே
யனையவஸ்தநொந்துவந்தோர்க்கஞ்சேலென்ன (1)

பரிவுகொளுங்கௌஸ்துவாபரணமார்பிற்
பங்கஜத்தெம்மன்னையுறப்பலவஃதத்து
முறைசெயுமைம்படையாதியவதாரங்க
ளோவ்வொன்றினுங்கைக்கொளோவ்வொன்றுமுற
விருபதிறுறிலக்கணமும்வாய்ந்ததேசத்
தேனையவவ்வவ்வுறுப்பிற்கேற்பபூண்டு
அரையினிற்பீதாம்பரமேலுயர்பட்டாடை
யணிமுதற்பஃறுகிலணிநாளும்பிறங்க (2)

வெண்கவரியிருபுறமும்வீசிநிற்ப
வெண்மைசெம்மைபசுமையெனுமும்மைப்பட்டுத்
தண்ணிழல்கூர்குடைகளுந்தண்ணிழனிழற்றச்
சகலத்ராளும்போந்துதாழ்ந்துநிற்ப
மண்ணின்மிசையடியர்குழாந்திரண்டாங்காங்கே
மாதவாகோவிந்தாகேசவாவென்
றுண்ணெகிழவோலமிட்டுப்போற்றிநிற்ப
வோதரியவிவிதவாத்தியங்களியாவும் (3)

எதிர்முழங்ககணிகையருமாடல்பாட
வியற்றிநிற்பபஜனைகுழாம்பஜித்துநிற்ப

திருவேங்கடாசலபதித்திருவடிப்பாசுரங்கள்

துதித்திறைஞ்சிவிண்ணவரும்புஷ்பமாரி
தோற்றுவிப்பவிலட்சுமித்தாய்ச்சுகுர்தபார்வை
கதித்துலகவிம்பரும்பரியாவர்பாலுங்
கலிகுறைவெலாமகன்றேயிருமையோரும்
பதிநின்றுளருட்கிடனாய்ப்பரிந்துநிற்பப்
பகரரியதாதாவாயாவுமீந்தே (4)

ஏகசக்ரவர்த்தியெனச்சேடசயனத்
திருந்துநிலமகளுமுடனிகழ்ச்சியாக
யோகநித்திரைபுரியுந்தேவதேவே
யுயர்திருவேங்கடமாதிதலங்களெங்கும்
போகராஜேந்திரதுரையாயாங்காங்கு
புதுமைநிகழுருநாமமகிமைகாட்டிச்
சோகமறநினைதோறுமெதிரிற்றோன்றித்
தொழும்பர்கள்வேண்டியவேண்டியாக்களிப்போய் (5)

(வேறு)

பட்டப்பகலேயிரவென்ற
பாவியடியேனையினுநீ
பட்டப்பகல்போலகிலமெலாம்
பரிபாலனஞ்செய்துவருந்தன்மை
பட்டப்பகலாய்க்கஜேந்திரனாற்
பிரகலாதனனாற்பாஞ்சாலி
பட்டத்தரையர்பெரியார்முதற்
பலராற்சுவானுபவத்தாலும் (6)

அறிந்தேனறிந்தேனையநின்பே
ரருளாலடைந்தேனின்மலர்த்தா
ளிறையோவெனைக்கைவிட்டிடா

தெந்தஞான்றுமாண்டாட்கொள்
நிறைபேரொளியாம்பொருள்வேறு
நீவேறன்றேயியற்கையினில்
மறைநீமறையின்பொ[illegible]ளுநீ
யென்னவெவர்க்குமுன்னிற்போய் (7)

ஒருபங்கன்புன்றாட்கடியேமுடையேமாவேமேலதற்கு
இருபங்கின்னன்புடையைநீயாகின்றாயெம்மேலன்றோ
உரைசெய்குறையேதினியெனக்கென்றுவந்தேனெனினுமுரையன்பும்
பெரியோய்நின்னாலன்றியேபேயேற்குளதாம்வழியின்றே (8)

எளியன்மனைசெய்பாக்கியமோவெவர்செய்பாக்கியமோகாணேன்
களிகூர்ந்தெளியன்புன்மனைக்குங்கடவுணீபோந்தருளியதந்
தெளியவிளக்கிச்சங்கையெலாஞ்செத்தமகவையளித்ததுவு
மளிகூர்பிறவுமையனின்பேரருளாலடைந்தபாக்கியமே (9)

இயமபுரஞ்சென்றதுவுமாண்டியமதருமன்முதலோரா
னயநல்லுபசாரம்பெற்றேநாடிப்போனதும்பெற்றே
வயமாய்வீடுவந்ததுவும்வள்ளலொருநீயேயன்றோ
பயமொன்றணுகாவகைநாளும்பரிபாலனஞ்செய்தருளுவையே (10)

தாய்தன்சிசுவுக்கெவ்வாறோவவ்வாறாகத்தமியேனைத்
தூயநீயிங்கணைத்தாண்டுவருகின்றதனாற்றுயர்தீர்ந்தே
ஞயநீயேநினதேயானெனதென்றுரைக்குமனைத்துமைய
நியபாடுபெரதவிப்புசேராவாறுண்டாட்கொள்ளே (11)

விருத்தம்

(வேறு)

ஐம்முறைவருவித்தனைநின்சந்நிதிக்கவ்
வைம்முறையாத்திரையனைத்து

நைம்மனமறநின்றுணையுடனிசழ
நணுகுழிநினதுயரெல்லை
கைம்மருவாமலகமெனயார்க்குங்
காணருநிலை துயர்காட்சி
பைம்மையிலருளிப்பாதுகாத்தனைநின்
பதமலர்வாழிவாழியவே (12)

நின்னுயரனுக்கிரகம்பலவெனக்கு
நிகழ்வித்தாய்பற்பலவிதத்து
மன்னைதந்தையுமவ்வளவினரல்ல
ராயுழியனைத்துநின்னருளே
யென்னுளக்குறைகள்கலிகளாருமை
யிடர்கள்சந்தேகங்கள்பலவு
முன்னுமென்னகத்தினின்றகல்வித்தே
யுயர்விளக்கஞ்சமாதானம் (13)

களிக்கடன்மூழ்கவளித்ததுபோலக்
காசினிக்கண்பகிர்முகத்தும்
விளிக்கநீநின்சந்நிதிக்கிறுதியின்கண்
வினையனேன்போந்தபோதளித்தா
யளிக்கடலுருநின்னளியந்தரங்க
வருமையாரறிதரவல்லார்
துளித்துணையேனுமழையின்றியாண்டுந்
தூயநற்றேற்றமுமின்றி (14)

பைம்புயறுணுந்தோன்றுறுதநயான்
படருறுங்கானினதெல்லை
மைம்முகில்படர்வித்தனைதிரளாக
வரையெலாமணுகினோர்வியப்ப

நொய்ம்மையின்றோன்றவுருமேறுமார்ப்ப
நுவலருமழைபொழிவித்தே
மெய்ம்மையிங்கெவரோபுண்ணியபுருடர்
மேவியுளாரெனப்பலரும் (15)

கூறுவித்தென்றனுளங்குளிர்வித்தாய்
கொடியனேன்கீழுறுநாட்கண்
வீறுமேலிடத்துமுற்றநாளிந்த
விதமதேபுரிந்தகாட்சியுமீந்
தாறுவித்தாயென்னுளமெலிவனைத்து
மலர்மேன்மங்கைத்தாயுமென்னைத்
தேறுவித்தேதிகில்பலவற்றினின்றுன்
திருவருட்கிடமதாக்கினரே (16)

இறும்பூதென்சொல்கேணிறைநீநின்னருளா
லேவவோநின்னருளேயோ
சிறுமைதீர்ஜ்ஞானவைராக்யுருவிற்
சிறியனேற்கருளியசெல்வம்
வறுமைபாழ்ம்பிணிநோயிடுகள்பேரிடிகள்
வாதனைவேதனையனைத்து
மிறைமைதீர்த்தென்றுங்காக்கவேண்டு
மியம்பருமகத்துவவரதே (17)

அபசாரமடியேனுற்றினேனல்ல
னடியேனையறியாமலொருகா
லுபசாரம்போலச்செய்துளேனெனினு
முறையென்சார்பினர்கள்செய்துறினும்
விபுநீமன்னிக்கவேண்டுமோட்பிரபுவே
மேதினிக்கண்ணனைபிதாவே
சுபஞ்செயாதொறுக்கிலுய்வரோமக்க
ளேய்மையேயுறக்கடைக்கணிப்பாய் (18)

போந்தையென்னுறையுள்வரையுநாளிதனைப்
போந்தநீபோந்ததேயாகி
யாந்தினமனைத்துமமர்ந்திடல்வேண்டு
மடைக்கலமடைக்கலநின்றாட்
சேர்ந்தநின்னனுக்கிரகமெலாமோங்க
வினியநின்னருடாயினருளுந்
தாந்தழைத்திடவெம்பாலுறல்வேண்டுஞ்
சகத்திரட்சகப்பிரானேயோ (19)

குறைகவியாருமைகளொழிந்தனவே
குருநீயுற்றிடவுமென்னுறையு
ணிறைநினதருமையறிதரவலனே
நிகழ்த்தவும்வல்லனேவெளியேன்
கறைமனமகன்றுன்கடாட்சவீட்சணியக்
காமர்வாழ்வுறக்கடைக்கணிப்பாய்
இறைகொளுமரசர்க்கரசதேவர்க்குந்
தேவமாதேவருக்கினியாய் (20)

குற்றங்கள்பார்க்கிற்சுற்றமின்றென்றே
கூறுமௌவையின்மொழிப்படியே
யுற்றவெங்குற்றம்பார்க்கினீயடியே
மொழிந்ததோகதியதேயாவே
நற்றவப்பேறேயுற்றவர்க்கெளியாய்
ஞாலத்துன்சரணடைபலரை
யற்பமும்விடாதுன்சீர்த்திமிக்கோங்க
வனுக்கிரகித்தாண்டருள்பெரியோய் (21)

மாதேவவெர்தைதிருவாய்மலர்ந்த
வாசகப்படியனுதினமு
மாதாரமாகித்துணைபுணையாகி
யாதரித்தருளணின்கடனே

சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்
திருவேங்கடாசலபதித்திருவடிப்பாசுரங்கள்

போதாகரத்தன்னருளொன்றுவாய்க்கிற்
புராதனரருட்கிடமாக
வேதேனுநன்மைசெய்விப்பையானு
மீடேறுவேனும்மருளால் (22)

திருவலர்மேன்மங்கைத்தாயார்திருவடிப்பிரார்த்தனைகள்

திருவேங்கடாசலமேமுதலதாகத்
திகழ்தருநற்றலங்களெலாஞ்சிறப்பநின்ற
பெரியமாலாகம்வளர்தேவதேவி
பிரசவலர்மேன்மங்கைமுதலதாக
வுரியபெயர்பலபிறங்கவெந்தையுள்ள
முவக்குமாறெஞ்ஞான்றுமிதமேசெய்யுந்
தெரிவரியவெந்தாயாண்டாண்மாதாயே
திருக்கருணைவழங்கியருள்கடைக்கணித்தே (1)

அம்மணிநீதாயடியேமக்களன்றே
வவனியிலுந்தாய்மகவையகற்றலுண்டோ
வெம்மைகூர்பிழைகள்பலசெயினுஞ்சேயை
விரைந்தடக்கியாள்வதுதாய்க்குரிமையன்றே
வெம்பெருமான்றிருவுளத்துக்கிசையுமாறிங்
கிதுகாறுநடவாமலின்றதாயுன்
னம்புஜத்தாளையும்பணியாதிருந்தகுற்ற
மனைத்தையுநீபொறுத்தருளியாளல்வேண்டும் (2)

விண்ணவர்க்கேபஞ்சதருமண்ணவர்க்கு
விளம்புமொருதருவுமீண்டில்லையேனும்
எண்ணவியம்பரியதெய்வதருநீயாகி
யிருக்கநின்றாளடுக்காமல்கெட்டேன்கெட்டேன்
கண்மணியேயனையதெய்வதாயுன்சீர்சால்

கடைக்கண்ணாற்பார்த்தருள்வாயில்லையாகில்
மண்ணில்மண்ணாய்மடிந்தாலுங்குற்றமில்லை
வளர்பிறப்போடிறப்பெய்திவருந்துவேனே (3)

தாய்நினதுதன்னருளாலன்றியுண்டோ
சாற்றுகின்றவிகபரவெச்சம்பத்தேனும்
தூயநினதருள்பெற்றோரன்றோஞாலந்
துதிக்கவிருமைப்பயனுந்துய்த்துநிற்போர்
காயவெனைக்கொடுமிடிமைவிடேனென்றந்தோ
கலிகுறைகள்பலவருத்தவுடனிகழ்ந்து
மாயுமெனைக்கண்பார்ப்பாயுலகெவைக்கு
மாதாவாய்விளங்கியவெம்மகாதாயேயோ (4)

அபயமெனில்நரனுமிரங்குவனே தாயே
யம்மணிநீயிரங்காயேற்கதிவேறில்லை
யுபயவுன்பதாம்புஜங்களென்சிரத்து
முளத்துமெந்தஞான்றுமுறவிருத்தல்செய்வாய்
தபசிநானன்றெனினுமிரங்கல்வேண்டுந்
தமியனுநின்மக்களிலோர்மகவேயன்றோ
வுபமானமெலாங்கடந்ததேவதேவர்க்
குரிமைபூண்டுலகனைத்துங்காக்குந்தாயே (5)

(வேறு)

இனியேதென்னும்பேரிடர்வந்தெய்தவேங்கிநின்றநா
ளனைநீயெந்தைக்கறிவித்தேயழைத்துக்கொடுவந்தப்போதே
வினையோரிமையிற்றீர்த்தருளிவியப்புமகிழ்ச்சியுறப்புரிந்து
மனையேகியநின்பெருங்கருணைமதிக்கவியம்பவசமன்றே (6)

ஊழிகாலமடுத்ததெனவுற்றகொடும்பேரிடரறிந்து
தோழியோடுபோந்துநீதுயர்தீர்சுபநற்குறிகாட்டி

## திருவலர்மேன்மங்கைத்தாயார்திருவடிப்பிரார்த்தனை

வாழவைத்தாயிடரகற்றிவள்ளல்வள்ளல்கருணைசிறீ
தாழப்பெற்றபேறுநின்னருளாலடைந்தபேறன்றோ (7)

ஏங்குந்தோறுமேனென்றேயினியமதியிற்சான்றமுக
மோங்கக்காட்டியுரைக்குமுன்னுள்ளக்குறையோர்ந்தோரிமையி
னீங்கச்செய்தேதுன்பமெலாநிதமுமகவைத்தாய்காக்கும்
பாங்குமிதற்கீடலவென்னப்பரிபாலனஞ்செய்நீவாழி (8)

இம்மைமறுமையிரண்டிடத்துமென்றென்றைக்குமெமையகலா
தெம்மையாண்டேவரல்வேண்டுமிறைவர்தாட்காளாக்கியெமை
விம்மதீரச்செயல்வேண்டும்வினைகடீரச்செயல்வேண்டு
மம்மணித்தாயேயுன்றாளல்லாற்கதிவேறிலையபயம் (9)

## திருவேங்கடாசலபதித்திருவடிப்பாசுரவெச்சரிக்கை

திருவேங்கடதிவ்யத்தலத்திடைமேற்கணுங்கீழும்
பெரிதுந்திருவொடுவாழ்தரும்பெருமானெச்சரிக்கை (1)
வேழமாதிமூலமெனவிரைந்தெய்தியாங்கதனை
வாழ்வித்தருள்கருணையுருவள்ளலெச்சரிக்கை (2)
அரசன்றொண்டமானுதியவளவில்சனத்திரட்கும்
பெரிதுமவர்விழைந்தாங்கருள்பேறேயெச்சரிக்கை (3)
உடையர்முதலாழ்வார்த்திரளுவக்கவருள்சுரந்தாய்
கடையேனையுங்குறிக்கொண்டருள்கதியேயெச்சரிக்கை (4)
பக்தபரிபாலனஞ்செய்பகவவகைவகையாம்
யுக்தத்திறச்சித்தியருளொருவவெச்சரிக்கை (5)
அடியேனுறுமனைவோருக்குமாபத்தமையத்தே
நொடியினுதித்திடர்தீர்த்திடுநோன்பேயெச்சரிக்கை (6)
குற்றங்குறையோராதனைகுழவிதனைக்காக்கும்
பெற்றியினிலுற்றோர்க்கருள்பிரபுவேயெச்சரிக்கை (7)
வெறுத்தேமிகவொறுத்தேயுளாவிளம்பாநின்றாயெனினு
மிறுதிக்கண்ணங்கவையின்பமதேசெய்வாயெச்சரிக்கை (8)

திருவேங்கடாசலபதித்திருவடிப்பாசுரவெச்சரிக்கை

ஒருநின் றிருவுளத்தின் குறிப்புணருந்திறமின்றி
வருந் தென்பிழைபொறுத்தாண்டருள்வாழ்வேயெச்சரிக்கை (9)
அருமைபலநிகழ்பேரருளலர்மேன்மங்கையென்றாய்
பெருமையுமத்திகழாகத்தாய்பெரும்பூணேயெச்சரிக்கை (10)
தாயினருடந்தையுன்றன் றண்மையருளிரண்டு
நாயினேனுக்கருள்வீரொந்தஞான்றுமெச்சரிக்கை (11)

படவேட்டம்மன் றிருவடிப்பா

வெண்செந்துறை

வாரணமுகத்துவள்ளல்வள்ளற்பிரான்
றேரருந்தாண்மலர்சிரமிசைக்கொள்வாம்

நூல்

விருத்தம் இரட்டை

ஆரணமொழிப்படிக்கைம்பெரும்பூதமா
யவற்றைப்பஞ்சீகரிக்க
வாக்கையாயளவிலகிலாண்டபிரம்மாண்டமா
யாதிமத்தியாந்தமாகிக்
காரணபராசத்தியாயாக்கலாதிமுக்
கடமையியற்றொழிலதாய்க்
கழறுங்குணங்களோர்மூன்றுமேபடிவமாய்க்
கருதமொழிதரவுமொண்ணு
நீரிளமதிச்சடாடவிமுக்கணெந்தைமி
னிகழ்த்துமோர்பாதியாகி
நிலவுந்தராதலமனைத்துமாமன்னையுரு
நீயெனக்கண்பார்த்தரு
ணேரரியநிலைமைப்புராதனமதாய்மற்று
நினைதொழுந்தபமேலிடு

62) சகலாலயசந்நிதானஸ்சௌத்தியமான்மியம்

படவேட்டம்மன்திருவடிப்பா

நேர்மைவளமியாவுமுறுபடவேடுமோக்ஷத்திர
நிலமுவந்தருளென்றுயே (1)

ஒற்றை

அன்றென்னையீன்றனளென்னிலதாயீன்றதங்
கஃநன்றுநீயுவந்தே
யின்றென்னையீன்றதேயீன்றதாமீஸ்வரி
யிணையில்ஜகத்ரட்சகி
குன்றிக்குழம்பியுண்மெலிந்துமிகவாடிநான்
குறையுற்றழுங்குமொல்லை
துன்றிஞுபிருவராய்த்தூயவஸ்தத்திலென்
சோர்வெலாந்தீர்த்தீன்றனை (2)

ஈன்றநீயீன்றதேயாயீன்றதாய்மகவை
யினிதுகாத்தருளல்போலச்
சான்றநீயென்றனைக்காத்தருளலோடெனைச்
சார்பலரையுங்காத்தரு
ளான்றநல்லோரொருவருக்காகவானின்மழை
யனைவர்க்குமுறவுமற்று
மூன்றுபைங்கூழ்க்கிறைத்திடுபுனலதன்புடை
யுறுபுற்குமுறுவித்தல்போல் (3)

இதயநின்னருளறியுநிதநிகழென்மதிவகையி
னியல்பெலாமருளறியுமே
நிதமுமியானுன்னிநின்சகளநிஷ்களபடிவ
நேர்மையாவையுமுரிமையாய்த்
துதிசெயாநிற்பதூஉந்தொழுதபூசிப்பதூஉந்
துயருறுநெறியுய்க்கநின்
பதமிதயங்கொளலுமுன்பரிபாலனம்பெறப்
பரிதவிப்பதுங்கண்டருள் (4)

படவேட்டம்மன்றிருவடிப்பா

ஆனைமுகர்நின்னெலைமுனணிபெறவிருத்தலொடவ்
வானைமுகர்குழவியுருவாய்க்
கானமயிலிளவலாகியமுருகவெந்தையொடு
களியோங்கநின்சந்நிதித்
தானமுரபுடைசூழ்ந்துசாற்றரியதேவர்கணந்
தானுமுறவாங்கிடைநடு
வானவர்களலர்மாரிபொழிதரவிளங்குநின்
மாணருட்கண்பார்த்தருள் (5)

நாற்றிசைப்பிரஜைகளில்வேண்டுவோர்வேண்டுகையி
னவிலுநினதரியகாட்சிப்
பேற்றினுக்குறுவித்தும்வருடங்கடோறும்
பிறங்காடிமதிவெள்ளிநாள்
சாற்றுமந்நாற்றிசைப்பிரஜைகளுந்திரளாய்ச்
சமைந்துபோந்துறவன்னோரு
ளுறறமாய்நின்றவர்களெண்ணியாங்கெண்ணியவை
யுறுவிக்குநீவாழிய (6)

நினதெல்லையுறுநெறியிற்பசுமைநிலமென்சொல்கே
ணிகழ்பதிகளென்சொல்லுகே
ணினக்கிராமமென்சொல்கேனியம்புமக்கிராமத்த
ரிதயகுணநடையென்சொல்கேன்
மனமகிழ்தடாகங்கள்பூம்பொழில்கடோப்புகள்
வளமையம்பணைகள்பைங்கூழ்
தணதாயங்கவ்வவர்ப்பணைதோறுமவ்வவர்
தந்தொழிற்செயலென்சொல்கேன் (7)

ஆண்டுநின்சந்நிதியையணுகலுறுமெல்லைக்க
ணனைவர்க்குமுற்காட்சியா
யீண்டஃதுபோன்றதின்றெனவிநாயகர்நின்ற
தென்சொல்கேனருளென்சொல்கேன்

வேண்டலுறுதாமரைகள்படர்தடமதென்சொல்கேன்
மேன்மைதருநதியென்சொல்கேன்
றாண்டரும்வரைத்தொடர்கள்கானகத்தொடர்களிடை
தனிவாழ்பராசத்தியே (8)

அடியனின்சந்நிதியையணுகுமுன்றருநிழலி
லம்மணிநின்னந்தரங்க
முடிமாத்திரக்காட்சியடியேற்குவெளியாக்க
மூடனேன்மதிமயங்க
கடையினின்சந்நிதியையணுகிநின்காட்சியைக்
காணநீமுன்காட்டிய
படிவமாக்குறவேறுமுறபரிவினோக்கியே
பணைநின்றனருள்வியந்தேன் (9)

அவ்வகைத்தாயநினதருளீங்காளெனைவிட்
டகன்றவாறெதுகுறித்தோ
வெவ்வகையினுங்குற்றமென்செயலினேருமென்
றியாவுநின்றாட்சேர்ந்தற
விவ்வகைத்துன்பங்கள்விட்டதேன்மாதேவி
யிணையில்கருணைப்பிராட்டி
செவ்விதிற்காத்தருள்சிற்சத்திவடிவினாய்
சிறியனேன்பிழைபொறுத்தே (10)

போந்தபலவமையமும்புனிதமுற்றுய்ந்தனன்
போதல்கூடாமையாகிப்
பாந்தவிவ்வமையமியானென்செய்கேனருளறியும்
பழிபிழையெலாம்பொறுப்பாய்
நீந்தரியயாவையுநீந்துவித்தருள்புரியு
நின்மலானந்தசிவையே

படவேட்டம்மன் திருவடிப்பா

சாந்தபூரணநிதானத்துரியஸ்தானமே
தற்காத்தருள்புரிகுவாய் (11)

இதைவரையுநாளினிற்றுய்தனிலுமினியதா
யிற்களஞ்சியமதோன்றி
னுதயமாயக்களஞ்சியசுதந்தரராகி
யுறநீயங்கணுகயானும்
விதவிதக்கூடவிளக்கனிகளைக்காட்டிபு
விலைக்குனக்காய்வாங்கினே
னிதமாகக்கொடுபோயிங்கிவையேயுனக்குற்ற
வென்றீந்தனுக்கிரகித்தாய் (12)

அனுக்கிரகித்திட்டவன்றேயெனைவருத்துதல்செய்
யாறுமைகண்ணீரெலாந்
தினையளவுநில்லாதகன்றவேயம்மணி
தேவதேவிமகாதாய்
மனக்குறைகளியாவுமவ்வண்ணமேதீர்த்துனது
மக்களெமைரட்சித்தரு
டனக்குநிகரோதரியதானேயலாதிலாத்
தற்பராபரையாயினுய் (13)

துயருறுங்குறிப்புக்கிருவகைத்தோற்றந்
தோற்றுவித்தாய்கினதஸ்தத்
தயர்வுறுதுள்ளகினைதொறுமதனை
யந்தநாண்முதலிந்நாள்வரையுந்
தயிரியமிழந்தேன்சரீரமுமெலிந்தேன்
றளர்ந்தனனயர்ந்தனன்கருணை
யியலுறுநீமுன்றோற்றியகுறிப்புக்
கெதிர்குறிப்பிரகித்தோற்றுவிக்க (14)

படவேட்டம்மன்றிருவடிப்பா

ஆறினேனுள்ளமாக்கையுந்தேறி
யயர்வெலாமொருகணப்போதில்
வீறெலாமடங்கித்தீர்க்கிடப்பெற்றேன்
விமலைநீயென்றும்வாழியவே
பேறெலாநினதுபேரருளென்றே
பேதையேன்பெரிதுநன்குணர்ந்தேன்
கூறருமகிமைமகாசக்தியெந்தாய்
கொடியேமைமுற்றுங்காத்தருளே (15)

பூரணமதியைப்போலுமாநநஞ்செம்
பொன்னுறழ்தேகமுஞ்சிரசி
லேரணிகூந்தற்புரியுஞ்செங்கையி
லேந்தியவனலுமாய்நினது
சீரணியுருவங்காட்டினாய்பயந்தேன்
சிறியனேன்பயமெலாந்தீரக்
காரணநினதுவுலகதாயுருவிற்
கடையெமக்கிரங்கியாண்டருளே (16)

எவர்க்கென்மேற்கோபங்குறைகுற்றமுறினு
மினியதாயுனதுபேரருளா
லவரவர்கோபம்பலவுமன்னிப்பித்
தனுவேனுமினியவ்வாருருமற்
புவனத்துமியாண்டுங்காத்தருள்புரிதல்
புண்ணியவுன்கடன்மாதா
வவலப்படுத்தாதனுக்கிரகம்புரிந்தா
ளற்புதமகோத்தமதேவி (17)

---

அம்மன்மார் பலர்க்கும்

பொதுப்பிரார்த்தனை

விருத்தம்

அகிலநிகிலங்களெலாமிமையிலாக்கி
யாதரிக்குமாதிசத்தியனுதிசத்தி
மகிமைநிறைபடவேடுவளருஞ்சத்தி
வளமானசோலாபூரனையனுலே
புகழ்சேரப்பூஜிக்கப்பட்டாண்டுற்றும்
பூதலத்திலாங்காங்குபுதுமையான
வகைவகையாமுருநாமம்வாய்ந்துநின்று
மாநிலத்தோரியாவரும்பூஜிக்கப்பெற்றே (1)

மக்களுக்கோர்தாயென்னவெவர்க்குந்தெய்வ
மாதாவாய்நின்றருளிவருந்துவிக்கும்
எக்குறையுமெக்கலியுமெவ்வெவ்விடரு
மெட்டுணையுமணுகாமலிருந்துகாத்துத்
தக்கபுகழ்கொண்டவெந்தாய்நின்னைப்போலுந்
தாயுண்டோநின்கருணைக்கடற்கொப்புண்டோ
துக்கமெலாந்தீர்தரக்கண்பார்த்தருள்வாய்
தொழும்பர்களைச்சேயாகவளர்க்குந்தேவி (2)

ஆயிரங்கண்ணுடையைநீயென்பரியாரு
மனைத்துநீயாயிருந்திங்கறிதலாலே
யாயிரங்கண்மாத்திரமோவனந்தகோடி
யற்புதக்கண்படைத்தநீயறியாதுண்டோ
தாயுனக்குஎளியேம்நேர்நிருவாகங்கள்
சர்வமும்பிரத்தியட்சமேயாயிருந்துந்
தாயுனதுபெருங்கருணைகாட்டாவாற்முற்
றளர்கின்றேமெலிகின்றேமிரங்கல்வேண்டும் (3)

(68) சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்
அம்மன்மார்பலர்க்கும் பொதுப்பிரார்த்தனை

இரங்காயேலதோகதியெங்கதியலாம
லெம்மாலேயெமக்காநற்கதிவேறில்லை
பெரியைநீயரியைநீயுன்றனக்குப்
பின்னன்றோதாய்தந்தைகுருதெய்வங்க
ளிருஞாலத்தவரும்வானவரும்போற்ற
வெல்லாஞ்செய்வல்லசிற்சத்தியேயாய்ப்
பெரியசிவபெருமான்றனிடபாகத்தும்
பிறங்கிநின்றபெரியவெம்பிராட்டியேயோ (4)

ஞானியர்களாயினோர்ஞானக்கண்ணா
ணாடோறுந்தரிசித்துமகிழப்பெற்ற
ஞானவடிவாகியநீஞானமில்லா
நாயேற்குமிரங்குதலேபுகழுடைத்து
மோனமகாஞானியர்கள்சித்தர்முத்தர்
முனிவரர்விண்ணவர்முதலோர்புகழ்ந்துபோற்ற
மோனமாயிருந்தருளுந்தேவதேவி
முக்குணத்துமனோன்மணியெம்முதல்வியேயோ (5)

நினைதோறுமெதிர்தோன்றிநினைத்தயாவு
நினைத்தவண்ணநிகழ்வித்துநீங்காவன்பு
தனையேநாளுங்காட்டிதாயிற்சான்ற
தண்கருணையுங்காட்டிதமியனேன்ற
னகமகிழவதிசயிக்குமற்புதங்க
ளளவிலாதனகாட்டியாதரித்தே
யிகமளித்துபரமுமளித்தென்றுநீங்கா
வின்றுணையாயிருந்தருணீவாழிவாழி (6)

எவராலுமறியவொணாவந்தரங்க
மெவராலுங்காணவொணாநாலக்கியானந்

தவராலும்பெறவரியதாயிற்சான்ற
தன்னருளொன்றெளியற்குந்தநியிலீந்து
நவநவமாம்பேரருளேநாளுங்காட்டி
நவியவிடாதாண்டுவருநற்றாயென்னை
யவமாக்காதிடைமுற்றுமாண்டாட்கொள்வ
தம்மணியுன்னருட்கடனீவாழிவாழி (7)

மாரியம்மன்பதிகம்

கடவுளர்வணக்கம்

(குறள்வெண்செந்துறை)

சீர்விநாயகர்முன்நிகழனைவோரி
னேர்பதம்பணிவாமியம்பவிந்நூலே

நூல்

ஆசிரியவிருத்தம்

கங்கைமதிதிகழ்சடிலர்கயிலைவாழ்தருமுதல்வர்
கற்பனையெலாங்கடந்தோர்
காமரரவாபரணர்வெண்ணீற்றுமேனியர்
கண்கண்மூன்றுடையவெந்தை
துங்கமிகுசிற்சத்திதாயானநீயே
துலங்கவிடபால்வளர்தருந்
தொன்மையர்சதாஞானவானந்தமாயினோர்
சுதரிருவரைப்படைத்தோர்
தங்கசிவேஸ்வரசகந்தனதகத்தூடு
தானவைக்கப்பாலுமாய்ச்
சாற்றவையெலாமாகியல்லவாய்நின்றிலகு
சம்புசிவசங்கரர்மகிழ்

சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்

மாரியம்மன்பதிகம்

பங்கயவிலோசன வென்னம்மணிமக்களைப்
பணியருட்கண்பார்த்தருள்
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (1)

தாய்நீநின்மக்களைத்தாங்கியாண்டருளலுன்
றகைமையல்லாதுபிறிதுன்
றகைமையன்றேயம்மமக்கள்படும்பாடு
தனைநினைந்திடிலுள்ளமே
தீயிலிடுமெழுகொப்பதாகியெண்ணுதெலாஞ்
சிந்தித்துநினதயரருட்
செயலெந்தவாறதாய்முடியுமோவென்றே
திடுக்கிட்டழுங்குதம்மா
ஆயநின்மக்கள்படும்பாடதொன்றாகி
லடிமைபாடதினெண்மடங்
கார்பாலெடுத்திதனையோதுவேன்றேற்றுவா
ராற்றுவாரொருவரில்லை
பாயவருவினையெலாந்தீர்த்துநின்மக்களைப்
பாதுகாத்திடலுன்கடன்
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (2)

புகழ்பெறலாநினதுபுவிநினதுசேணினது
பொருளுநினதருளுநினதே
பொற்புநினதிற்பொலிவுசற்பொலிவுநின்னதே
புகல்செல்வமல்லல்நினதே
திகழகிலகாரணிமறைகணவில்பூரணி
சேயரிக்கருநெடுங்கட்
சிவகாமசுந்தரிபவசாகரப்புணைத்

மாரியம்மன்பதிகம்

தேவிகௌரிசாம்பவி
நிகழெனதிடுக்கணோடுன்மைபுன்மையனைத்து
நீங்கிடவுமக்கள்பாடு
நீங்கிடவுநீங்கியவர்நின்னருளைவாழ்த்தவு
நிமலைநீநின்கடைக்கண்
பகையறவுமவர்கண்மிசைநிகழ்வித்துக்காத்தருளல்
பரைநினக்குரியகடனே
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (3)

நினைவுமாத்திரையினுலாக்கலாதித்தொழி
னிகழ்த்தரசிளங்குமரியே
நித்தியகல்யாணிச்சுமங்கலைசுதந்தரி
நிகர்பிறரிலாதவன்ணய்
மனமாதிகட்கெனைத்துந்தோன்றுருமலே
மறைகள்புகலுண்மைஞான
மருவிஞேர்தமதுநிரதிசயசுகஸ்வானுபவ
மாண்புசால்காட்சியூடு
தினமுமம்பலவாணரோடரியநடனஞ்
சிறப்பப்புரிந்துலகெலாஞ்
செவ்விதில்புரக்குநின்றண்ணருளினைக்காட்டி
தேவதருவாய்விளங்கி
பனிமழைத்தாரையொத்திழிகணீர்மாற்றுநீ
பரிபாலனஞ்செயல்கடன்
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (4)

சஞ்சிதாகாமியபிராரத்தமெனவினையின்
றன்மைமுவகையதாகத்

மாரியம்மன்பதிகம்

தானுறினுமவையேதுவாக்கொடுமையேபிணி
தௌர்ப்பாக்கியமிடர்சூழினும்
பஞ்சசுழல்காற்றிற்படும்பாடதொக்குநின்
பாவனுதீதநற்ருள்
பற்றிநிற்போர்க்கெனப்பழமறைகளறையுமே
பரமசிவையேசங்கரி
யஞ்சிமிகவந்துனதடைக்கலம்புக்கவென்
ஞருமைகண்ணீரொலா
மாற்றித்துடைத்தணைத்தடியிணைகண்முடிசூட்டி
யாட்கொள்ளல்வேண்டுமெம்மா
பஞ்சமேயாயினும்பரிபாலனஞ்செயும்
பாரநினதேயல்லவோ
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (5)

அழலுருவமானநீயண்டிடவுமக்களுட
லழலாகவீசுதம்மா
வாலித்துபூரித்தெழும்பிநீவாடாம
லாக்கையுளடங்காமலே
பழமைநின்பால்வணஞ்சிறிதுமாருமலே
பால்கொடுபெடிப்படியதாப்
பாவலையலட்டாமலுண்பித்துநீயிட்ட
பாரமதிறக்கியருள்வா
யழுமக்கள்பாலினுமருந்துதல்செயும்மக்க
ளாச்சிபாசசிச்சோச்சியென்
றறைமக்கள்கல்லுமேயுருகுமேமக்களெனி
லாதிதாய்கருணையிலையோ
பழிபிழைகளபசாரமசுசியாதியதோஷம்

பலவுமினுமன்னித்தருள்
பராபனாதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (6)

வெண்ணீற்றுமேனியுங்குங்குமத்திருநுதலும்
விரிசடையுஞ்செங்கையினில்
மிளிர்பிரம்புங்கொடுபசும்பொன்னணங்குரு
வியப்புறக்காட்டியின்னு
மெண்ணரியவென்புகள்கிடந்தொளிர்தராகிற்கு
மீமத்தையுங்காட்டியே
விறைவிநயதனூடுலாவிகிற்றலையுமுன்
னின்னருளென்மிசையுண்டெனுந்
தண்ணமிர்தகருணாகரக்குறியையுங்காட்டி
சலனமடைபோதனைத்துஞ்
சாட்சாத்கரித்தெதிர்விளங்கியஞ்சேலெனத்
தநயனாயணைத்தாண்டுநீ
பண்ணுமுபகாரமெந்நாளுமறவேனுனது
பதநிதம்பூசைபுரிவேன்
பராபனாதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (7)

வேளையொருவிதமதாக்காட்சிதருகின்றையிவ்
விவிதவிளையாடல்புரியு
மேதகுசமத்காரவற்புதமெலாநிறைநின்
மெய்யானவடிவமேதோ
காளைநம்மடிமையின்காற்றாசினுங்கடை
காட்சியிவனுக்களித்தல்
காரியமதல்லவென்றுண்ணினைந்தாயில்லை
காலமெல்லாம்வாழிநீ
வாளையேந்திக்கரத்தேகலங்கிடுமென்முன்

மாரியம்மன்பதிகம்

வந்துநீநின்றதனையே
மதியிலேன்சிரசிலென்மனைவியின்சிரசினில்
வைத்தெடுத்துனைசெய்தநின்
பாளிதத்தினின்மிக்கவாய்மைமொழிகாத்தநின்
பதமலரெந்நாளும்வாழி
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (8)

அடிமையின்சித்தநின்மக்கள்பொருட்டாக
வசைவுற்றயர்ந்துடைந்தவ்
வரகுலத்தோடுநின்னனுதினப்பூசையினை
யாற்றுநாள்களிலவரைநீ
யிடதகாலாலுதைத்திடவெனுட்கண்டடிமை
யின்பவாரிதிபுகுந்து
மிதயவிண்டோற்றமோவலதுநின்னருளினு
லெய்தியவெதார்த்தமோவென்
றிடையிடையென்னுளமூசல்போலாடிநிற்குங
ளிறைவிநின்மக்கடேர்ந்து
வின்புறக்கண்டுநின்னருளினைவியந்துமே
யிருகைசிரங்கூப்பினேன்
படியினுழல்கடையனியானுதலினென னக்கிந்த
பான்மையம்மணிபொறுப்பாய்
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (9)

ஞானசம்பந்தர்க்களித்தனைதனப்பா
லுன்மறையினுண்மைகூடி
நானிலத்தேவாழ்குமாரதேவர்க்குமே
நல்லினையபிடேகபா

## மாரியம்மன்பதிகம்

தீனசிறுபாலன்பசிக்கிரங்கிப்பின்னர்
செல்லவிட்டாய்பாற்கடல
நிகழ்மறைகளிதிகாசநூற்களினிலுன்பெருமை
செப்பாததொன்றுமில்லை
யீனமறநின்றுனையிதயத்திலுன்னினோ
ரிதயத்துனுதபேர்க
ளென்னுமிருவகையோர்க்குநீசெய்தபேருதவி
யெண்ணியதிலெழுபாலையே
பானஞ்செயாநிற்குமடிமைமனமகிழநின்
பாலனைக்காத்தலரிதோ
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (10)

சிரசின்கண்முத்தினைச்சேருச்சியின்முத்தை
திகழ்வதனமுத்தைபின்னர்
செய்யகந்தரமுத்தைதோளிணையின்முத்தினைச்
சேராகமுத்தையப்பா
லுனைவயிற்றினின்முத்தைதொடையிணையின்முத்தினை
யுறுமுழங்காலின்முத்தை
யொன்றியகணுக்காலின்முத்தைபதவிணைமுத்தை
யொன்றுபின்னொன்றதாகத்
தனையினிலிறக்கியருள்பழுதொன்றும்வாராமல்
சந்ததிவருந்துறுமல்
சகதீஸ்வரியாதிபரமேஸ்வரியுமைச்
சாட்சாத்சிவைதிரிபுரை
பரைமனோன்மணிபுராந்தகித்ரியம்பகியகில
பாலிசூலிக்கபாலி
பராபரைதராதலத்தாய்மகத்தாயவிர்
பராசத்தியேமாரியே (11)

## ஈஸ்வரர்அஷ்டமூர்த்தம்

### செய்யுள்

அணிகொள்பிருதிவெனுநிலமேயாதாரமதாகியநீரே
யிணையிலனலேயாரோக்கியவிதஞ்செய்காற்றேயிடவிசும்பே
திணையிற்சிவசாட்சியெனச்செப்புக்துரியவான்மாவே
புணையாகியவவ்வான்மாவின்பொலிவாற்பொலியுங்கதிர்மதிகாள் (1)

நீவிரெல்லாமெந்தைபிராணிகரினுடலுக்குறுப்பாக
மேவிநின்றீர்வேதமுறைமைவிளம்புமஷ்டமூர்த்தமென்றே
தேவதேவவன்னோர்தன்சீர்சேருளோமேதருளும்
பாவியேனுக்குண்டாகப்பரிபாலனஞ்செய்தருள்புரிவீர் (2)

(நவக்கிரகம்)

ஒப்பிலுமைசிற்சத்தியெந்தாயுடனேநாளுமகேசரெனச்
செப்புமெந்தைச்சிவபெருமான்றிகழுஞ்சகத்தையாளுதற்குத்
தப்புறுத்தன்கைக்கிசைந்ததக்ககருவியாய்த்தனைச்சூழ்ந்
தெப்போதைக்குமுறப்பெற்றவினியகிரகதேவதைகாளோ (1)

கதிரோமதிமாப்பிரகஸ்பதியேகாரியங்காரகவெள்ளி
புதராகுக்கேதுக்காளோபுண்ணியவும்மைச்சரணடைந்தே
னதிரச்செய்யாதருள்சுரந்தேயனைதன்சிசுவைககாப்பதுபோ
விதமாயெனையுமெனைமேவுமெல்லோரையுங்காத்தருள்புரிவீர் (2)

## ஆஞ்சனேயரருட்பா

### விருத்தம்

உம்பர்கண்முனிவரிருடிகளருளு
முயர்க்ஷீரவாரிதிநாப்ப
ணிம்பரும்பர்களாதியரெலாம்பரவ
வெழிலறிதயிலமர்ந்தருளும்

ஆஞ்சனேயரருட்பா

பைம்புயன்மேனித்திருநெடுமாலின்
பைந்திருவின்மிகுமருளுஞ்
சம்பூரணமதாய்வாய்ந்தவாஞ்சனேய
தன்னியக்ருபாகரவெனையாள் (1)

உன்போற்சகத்ரட்சகப்பிரபுவுள்ளற்
குளர்கொலோவுரிமைமேவிட்டோ
ரின்னடைபலவுநடந்துதவியதோ
டின்னருள்பெறற்பொருட்டாக
வென்னென்னபாடுபட்டுளாய்கொல்லோ
விதிகாசநவிலுதனோக்கிற்
பின்னும்வேறொருவனத்தகைபாடு
பிறவிவேறுறினுமேற்கொளானே (2)

திருநெடுமாலின்திருவருளேநின்
றேகமென்றுன்னலாகின்றே
னரிதயலென்னிலத்தகையொருமை
யாதியவனுக்கிரகவிசேடம்
கரிமூலமென்னக்கடிதுபோந்துற்ற
கராவிடர்தொலைத்தளித்திட்ட
ஹரிபதாம்புஜப்பேரருணிறைபெரியோ
யடியனுன்னடியிணையடைந்தேன் (3)

சிறியராற்றுபிழைபெரியராகியவர்
தீர்தரப்பொறுத்தருளுவரொன்
றறைதராநின்றநூலெலாம்புவியி
லறிஞருமெளிஞருமஃதே
பறைமுழக்கதுபோற்கூறுகின்றனரே
பாவியேனென்செய்தேனெனினுங்
குறையெலாந்தீரமன்னித்துன்னருளிக்
கொடுமையேற்குறக்கடைக்கணிப்பாய் (4)

சகலாலயசந்நிதானஸ்தௌத்தியமான்மியம்

ஆஞ்சனேயரருட்பா

திருவேங்கடாசலத்திருநெடுமொற்குச்
சேற்றமியாதுநினுமென்மேலே
யரியசீயிடைநின்றெனதெளிமைப்பண்
பறியாமையாவையுங்காட்டிப்
பரிவுறுவித்தெம்மேலெமைநாளும்
பாலனஞ்செய்விக்கவேண்டு
மிருஞாலத்தியாண்டுமாலயம்விழாவோ
டெவருமேத்தல்செயநின்றோய் (5)

அனைத்துமீண்டுரைத்தற்கரியநுஞ்செயற்கே
யாக்கியிக்குறவடியேனிம்
மனக்கிலேசங்கள்வருந்துதல்பலவும்
வறினுனேற்குற்றதேனுதா
வெனக்கினியுன்போல்வாரிலையபய
மென்னிடர்தீர்ப்பதுன்கடனே
தனக்கொருதானேநிகரெனத்தக்க
தன்மையோய்வன்மையோய்நல்லோய் (6)

பாவியானெனினும்பதவிணையடைந்துப்
பாலனஞ்செயவிரந்திடுமென்
னுவிதேகாதிச்சிறுமையைநோக்கி
யாதரித்தருளலுன்கடனே
தேவருமுவக்குமுதாரசர்வோத்தம
தீரசற்கனிகரசுசீல
மேவருநவவியாகரணபண்டிதமா
மிகக்கனிந்தருள்செயப்பெற்றோய் (7)

ஈநூற்கணுதியோடந்தமாகக்கூறியுள்ளதேவதேவிகளியாவருக்கும்
பொதுப்பிரார்த்தனை

ஈநூற்கணுதியோடந்தமாகக்கூறியுள்ளதேவதேவிகளியாவருக்கும்
பொதுப்பிரார்த்தனை

விருத்தம்

இந்தநூலதனிலியம்பனேவோர்தாட்
கெளியனேன்செய்யும்விண்ணப்பம்
முந்தியான்செய்தகொடுமைபாதகங்கள்
முழுமையுமுற்றுமன்னித்து
எந்தவோருயிரையுங்கொலாவரமு
மின்னல்கூறுணுவரமுஞ்
சந்ததஞ்சைவநெறியுறும்வரமுந்
தாழ்வுகேளுமையுமருள்வீர் (1)

பொய்யுரையாதவரம்விபசாரப்
புணர்ச்சிசெய்யாவரம்பிறரை
வெய்யமோசத்தால்வஞ்சியாவரமும்
வெங்கொடுமைதவுணுவரமு
மையையோவெனவோருயிர்வருந்திடுமோ
றவலஞ்செய்வித்திடாவரமு
மெய்யனுயிருமைப்பேறுடையோனய்
மிளிர்தரும்வரமுமீந்தருள்வீர் (2)

ஞானபூரணநன்னுட்டனாடோறு
நலந்திகழ்தரத்தழைத்திடுதற்
கானநல்வரமுமரும்பெருங்குணமே
யலதிழிகுணமுறுவரமுந்
தானுறத்தானதருமமாதியவுந்
தழைத்திடத்தாரணிதனிலே
யீனமொன்றுறுமவிருந்திறுதியின்க
ணின்பவீடுறும்வரமருள்வீர் (3)

செய்யுள்

அம்பலத்தார்தரு கோவிந்தராஜ
வெம்பெருமாள்பதவிணைசிரங்கொள்வாம்.

---

## நடேசர் கீர்த்தனைகள்

இராகதாளம் இஷ்டானுசாரம்

பல்லவி

அரசேநின்னருளெந்நாள் பெறுவேன்—தென்மன்றத்
துறையும்—அரசேநின்னருளெந்நாள்பெறுவேன்

அநுபல்லவி

பரிவுகூரடியார்கள் பலருக்கும்
பாராவாரமேயனைய தண்ணருள்
பெரிதுமீந்தநீபாவி யடியேனைப்
பெரிதுங்கைசோர விட்டனைபோலும் (அரசே)

சரணங்கள்

பெரியநீயுறவாண்டவனாகியே
பேதையடிமையேன் வாடநீபார்ப்பது
தருமமோசற்கருமமோ தில்லைத்
தாண்டவராய சகத்சர்வேச

தனியே—நினையே—யுனியே—தினமே

தாயைச்சேயது, தாவிநிற்றல்போ
லாயநின்னைய, வரவியும்விட்டாய் (அரசே)

ஐயநீயேயன்றிவேறு திக்கின்றென்றுன்
றாய்மலர்த்தாட்கே யடைக்கலமாகியு
மய்யகொடும் பாழ்க்கலிகளாதி
யநர்த்தங்கட்கே யாளாக்கினாயே

நடேசர்கீர்த்தனை

யரியோ—யுரியோய்—பெரியோய்—கிளையோ

யற்புதச்சிவ, காமியம்மணி
பொற்பவிரிட, பாற்கண்பொலியும் (அரசே)

உள்ளக்குறைகளுரைக்க வென்றுலிலை
யோர்ந்துநீயே யுளம்போந்தவைதீர்த்தரு
டெள்ளமுதேதேனே நற்கனியே
தெய்வச்செழுந் தருவேதிருவே

சித்தே—வித்தே—முத்தே—யொத்தோய்

சிற்சபைதிகழ், தெய்வச்சிரோன்மணி
சற்சைவத்தினர், சாருஞ்சிகாமணி (அரசே)

வழிவழிபரம்பரை யிஷ்டதெய்வ
வள்ளல்நீயாகியுந் துள்ளித்துடித்துநா
னழுதகண்ணுஞ் சிந்தியழுக்கு
மாகியலறியாத ரிப்பாரின்றி

யஞ்சி—கெஞ்சி—நைஞ்சு—பஞ்சா

யானந்தத்தாண், டவநின்னருளே
தானந்தத்தாஞ், சார்பென்றடைந்தேன் (அரசே)

உயிர்க்குயிராயாண்டு முற்றுநின்
றுலகெலாமுள வாக்கியருளும்
வயிற்றெழிற் சிவகாமித்தாயும்
வறிஞனேற்கிரங்காமற் போயிற்றே

வானே—கோனே—தானே—தானு

மாசிலாமணி, யேகன்மாமறை
பேசருந்துணை, யேசற்பேற்றிறை (அரசே)

தாய்தந்தையர்க்குத் தநயர்பாரமோ
தழைகொடிக்.கதன்காய்பாரமோ
ஞாயமென்னமோ நான்படவந்த
நஷ்டங்கஷ்டந் துஷ்டஇஷ்டம்

நடேசர்கீர்த்தனை

நைந்தே—ஞெந்தேன்—வெந்தே—னந்தோ

நம்பினேனை, நாளுமாண்டரு
ளெம்பிரானே, யீசனேயோ (அரசே)

ஏதுசெய்யினு மெப்படிவிடினு
மிறைநீயேயினதே யாவுமன்றி
யோதுமியானென தென்பதொன்றிலை
யுன்னருட்கேயொருங் கீந்தேனியாவு

மொன்றே—பொன்றே—மன்றே—நன்றே

யோதுதற்கரியோயுரியோய்
சீதநீர்சிரஞ்சேர்பெரியோய் (அரசே)

---

வேறு

இராகம்—சாமா, தாளம்—ஆதி

அன்னைதந்தைநீ குருவுந்தெய்வநீ
யனைத்துநீயெனவேயுனைத்தானே யடுத்தேனே
தடுத்தையோ கைவிடுத்தையோ, வி—வி

அந்தநாண்முத லிந்தநாளுமே
லெந்தநாளைக்குமே யையவுனக்கே வெய்யவெனையே
யாக்கியுந் துய ராக்கினாய், ஆ—ஆ

ஆக்கின துயர் நன்மைக்கோ துன்மைக்கோ
வறிகிலேனப்பனே மனதொப்பவே துயர்தப்பவே
யருளுவாயெனக்கருளுவாய், அ—அ

கஷ்டமுறுமலே நஷ்டமுறுமலே
கவலைத்துயர்தீர வவம்பேர தவமாரக்
காண்பெறேனே நின்னருள்பூண்பேனே, பூ—பூ

நடேசர்கீர்த்தனை

ஆருக்கொடுமிடி யழுங்கல்புழுங்கல்க
ளகத்தமரியாதும் பகைத்தீது மெந்தப்போது
மடையாமலுள முடையாமல், உ—உ

காப்பதுன்கடன் சருணாநிதியே யென்
கண்ணேகண்மணியே விண்ணினொளியே
யெண்ணுமளியே கடவுளே யெனையுடையவா, உ—உ

நின்றிருவடியென்னு ணீங்காதறவெஞ்ஞான்று
நீயருட்கண்பார்ப்பா யென்சொல்லேற்பாய்
துயர்தீர்ப்பாய் நீதியே என்ஆதியே, ஆ—ஆ

ஏமபாதையெனை யெந்தஞான்றுமுறும
லேந்தியாளையனே திகழ்துய்யனே
புகழ்மெய்யனே ஈஸ்வரா சகதீஸ்வரா, ஈ—ஈ

தெய்வநீயேயன்றி திக்குவேறில்லைகாண்
சீயென்றொறுக்காதே வெறுக்காதே
மறுக்காதேசித்தனே வல்லமுத்தனே, மு—மு

இந்நூலையச்சிடுவித்தவரது

விசேடம்

ஆசிரியப்பா (நிலமண்டிலம்)

திருமகள்கலைமகள்சிறப்பவீற்றிருப்பதூஉ
மருமைகொள்பாலாறணிபெறப்படர்வதூஉ
மாமழைதிதொறும்வண்மழைபொழிவதூஉந்
தேமலர்ப்பைம்பொழிற்றிரள்பலசெறிவதூஉஞ்
செஞ்சாலிப்பணைத்திரள்பலவுடையெலா
மெஞ்சாவியலுறவினியபைங்கனிவகைத்
தருதெங்குகமுகந்தருமுதற்றண்ணிழ
றருநெடும்பணைவாய்தருபலகுழீஇயுற
வாற்றின்பிரிவுகளாங்காங்குறலொடு

தேற்றுறுந்தெண்ணீர்ச்செழுந்தடம்பலவுறச்
சேணுறுமாளிகைத்திரள்பலதிகழ்தரக்
காணருமாவணங்களிபெறக்காண்புற
நாற்றிறத்தவருநனியவரவர்நெறி
போற்றியங்கொழுகுறப்புனிதமோங்க
வாதுலற்கன்னமாதியதாக
வோதுமெண்ணான்குமுறையார்மாட்டுந்
தேவாலயங்கடோர்திருவிழாக்கள்
மேவாசிற்பமெய்ம்மைதழைப்ப
வாதரவினரோயாண்டுளோராயினு
மாதரவிழப்போர்க்காதரஞ்செய்வதூஉ
மிதிகாசபுராணவெழிலாகமங்க
ணிதமாங்காங்குநிகழ்த்தப்படுவதூஉ
மாகியவளனெலாமமைதரத்திகழுஞ்
சோகமிலாறைத்தொலபதியதனிற்
சார்நாராயணசாமிமாற்பெயரினர்
பாரினிலிராயபாதூர்ப்பட்டம்
வாய்ந்தவர்சீமான்வளமெலாமுற்றவ
ராய்ந்தவர்நூற்பலவறிஞரன்னவர்
பினுமுத்துசாமிவேட்பெயரினற்குமுனு
மினநலமனநலமியம்பெலாநலமுந்
தனதுருவாகத்தான்கொடுவந்தோர்
நினைதனதனையேசிகர்க்கினுந்தனத்தி
விளமைதொடங்கிலெளகிகத்தோர்தினை
யளவுமனஞ்செலாதின்பவீடளிக்கும்
வைதிகநூற்களின்மணமெலாஞ்செலுத்தியவ்
வைதிகநூற்களின்மாண்பொருள்பலவுந்
திரட்டிவனைந்தோர்செந்நூலாக்கிப்
பெரிதனைதப்போற்றிப்பிரமானுபூதியை
நான்முறைதழுவிநோயொருவருக்குந்

தானுறுவியாமற்சகலர்க்குநேயரா
யிரக்கமீகையாவுமுளராய்ப்
பரிவுகொள்சாந்தப்பான்மையடக்க
மாதியவிலக்கணமனைத்துமுடையரா
யோதுமாஞானியென்றுரைபெயர்க்குரியரா
யில்வாழ்க்கையினிலிருந்துமிலராய்
நல்லோரிணக்கநாட்டமிக்குளரா
யிலகியமுனிசாமியெனுமுதலியாரு
நலவவர்தனக்கிசைநலமெலாந்திரண்டவர்க்
குறுதுணையெனவுற்றுயர்கற்பிலக்கண
நிறைவெலாமார்ந்துநிகரிறன்னாயக
னிகழ்த்தும்பணியெலாநிகழ்த்தியாங்குனுற்றலோ
டகத்திருமையருமபேதமேயென்ன
நடைநொடிபாவனைநாட்டமெவற்றுந்
திடவொற்றுமையுறீஇத்திருவெனுஞ்சிறப்புற்
றமைதிபொறுமையடைபவரியார்க்கு
மிமையிற்சமையலின்னுபசரிப்போ
டியன்றவரையியியார்க்குமுதவி
நயவுரைநோன்புநல்லொழுக்கமெலாந்
தனதாய்நிலவியதஞ்சம்மாளெனுங்
கனமாதரசுங்களிப்பவவர்செய்
நலமெலாமுருக்கொடுநானிலத்துற்றென
விலகுறுபுதல்வனுமினிதுதோன்றப்பெற்
றுரைராயர்பாதுராமுயர்பெருந்தந்தையா
லரும்பெருந்தாயாங்கோவிந்தம்மாளாற்
றத்துமகவாய்த்தான்கொளப்பெற்று
சித்தமகிழ்ந்தவர்செல்வத்திற்செல்வமாய்ப்
போதொருவண்ணநாளொருமேனியாய்ப்
பாதுகாக்கப்பகரிவர்தந்தையே



யிவரானவவர்தனிலக்கணமெலாமுற்
றவரினுமுனையுழியதிநலமிகவுற்
ஞன்றோர்க்காணலவர்க்குபசரித்தல்
சான்றோர்ப்பணிதருனதரும
மியல்வணையியற்றலில்லையென்னும
லயலவர்க்குதவலாலயந்தொழுதல்
புண்ணியத்தலமெலாம்பொற்புறவேக
னண்ணுவோர்வேண்டுவநல்கலீச்சுரர்பா
லளவிலுள்வாஞ்சையாதலருளுன்றோ
ருளமகிழ்தரப்பெற்றுய்ந்தவாறுய்ய
வணைகடந்தேகுமாறுபோன்ற
வினையிலுட்பரிவுறலெவர்க்குமிதஞ்செய
லாதிசற்குணமெலாமற்புறத்தழுவி
யோதும்வைதிகநூலுயர்தடமூழ்கித்
தெளிவுதேற்சித்திறனெலாநன்குறீஇக்
களிகூரனுபவக்காட்சிதிகழப்
பிறங்குகண்ணப்பமுதலியார்ப்பெயரின
ரறையிந்நன்னூலகிலத்தெவர்க்கு
முபயோகமாகவுவந்தச்சிட்டனர்
சுபதபமோங்கத்தூயரெவர்க்குமே

இஃதிந்நூலாசிரியராகிய

கா. கோவிந்தராஜதேசிகரால்

செய்யப்பட்டது.

---

